*Kumaraṉ*

*Āram 18, muttu 44*

*June 19, 1941*

Record no. 313

REGD. NO. M. 1823. | 12 பக்கங்கள். | KUMARAN WEEKLY.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய்
முதலிய
வெளிநாடு
ஒ 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்



வியாழன்தோறும் வெளிவரும் | மாதப் பதிப்பும் சேர்ந்தது | PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 18. | காரைக்குடி, விஷு-ஆ ஆனி-மீ 6-உ (19—6—41) | முத்து 44

(சென்ற வாரத் தொடர்ச்சி)

வீதிகளெங்கும் இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெற, இராமன் இலக்குவனோடும் சென்று சபா மண்டபத்தை யடைகிருன். அடைந்து முறைப்படி வசிஷ்டரை முதலிலே வணங்கிப் பின் தசரதருடைய பாதங்களிலே பணிந்தான். பணிந்தவுடனே, தசரதருடைய உள்ளத்திலே அன்பு ஊறி நிறைகிறது; கண்களிலே நீர் பெருகுகிறது. பெருக, இராமனை வாரித் தழுவிக் கொண்டார் தசரதர் என்று கூறினுர் கம்பர். இதைச் சொல்லி முடித்ததும், இது போதாதென்று பட்டுவிட்டது அவருக்கு. தசரதர் ஏன் இராமனை வாரித் தழுவ வேண்டும்? இனி அவன் சக்ரவர்த்தியாகப் போகிருன்; உலக மத்தனையும் தாங்கி நிற்பதற்கு வேண்டிய திண்மையும், வலியும் அவனுடைய தோளுக் கிருக்கின்றனவா! அதற்கு வேண்டிய அகலமும் உரமும் திருமகள் உறையும் அவன் மார்புக்கு இருக்கின்றனவா என்றும் ஆராய வேண்டியே, தசரதர் இராமனுடைய தோளையும் மார்பையும் தமது தோளும் மார்புங்கொண்டு அளந்தது போலத் தோன்றிற்றும் கம்பருக்கு. அவரே இதைச் சொல்கிருர்:

"நலங்கோள் மைந்தவனைத் தழுவினன்
என்பதேன்? நளிர் நீர்
நிலங்கள் தாங்குறு நிலையினை
நிலையிட நினைந்தான்
விலங்கல் அன்னதிண் தோவளையும்
மெய்த்திரு இருக்கும்
அலங்கல் மார்பையும் தனதுதோள்
மார்புகோண் டளந்தான்."

அளந்த தசரதர் இராமனைத் தம் பக்கத்திலே அமர வைத்து அன்போடு அவனை நோக்கினுராம். அன்போடு நோக்கினுர் என்று இங்கே கம்பர் சொல்லியிருப்பதில் நாம் எவ்வளவோ விஷயங்களை உணரலாம். தசரதருக்கு இராமன் இன்னும் குழந்தைதானே? இச் சிறு பையன் இனி அரசாளப் போகிருன்: எத்துணைத் துன்பங்களை இவன் தாங்கி நிற்கவேண்டியிருக்கும்? இவ் வகையான பல எண்ணங்களும் தசருடைய மனத்தில் தோன்றவே, மகனிடத்திலே அவருக்கு ஒரு பரிவு ஏற்படுகிறது. ஆகவே, அவர் தம் மகனை மருங்கிருத்தி அன்புற நோக்கினுர்.

கம்பன் விழா விரிவுரை.

## தசரதர் மந்திராலோசனை

(திரு. மு. அருணுசலம் எம். ஏ.)

★

ஒரு துயரக் குறிப்பையும் காணலாம். இங்கே அன்போடு மகனைப் பார்த்த தசரதர் தம் அருமை மகனைப் பிறகு பார்க்கவேயில்லை. மகுடாபிஷேகச் செய்தி பரவியதும் கைகேயி வேண்டிய வரத்தால் இராமன் வனத்துக்குச் செல்லும்போது தந்தையைப் பாராமலே விடைபெற்றுக் கொள்ளுகிருன். தசரதரும் உயிர் துறக்கிருர். இப்போது பார்ப்பதே கடைசி முறை. ஆகவே தம்மை அறியாமலே தசரதருக்கு இந்தச் சந்தர்ப்பத்திலே ஒரு விசேஷ அன்பு தோன்றி மகனைக் கண் குளிரக் கண்டு மகிழ்ச்சியடைகிருர் போலும்.

தாம் அழைத்த காரணத்தை இராமனிடத்தே விளக்கமாகக் கூறுகிருர். "நம் முன்னோர் சென்ற வழியைப் பின்பற்றி நானும் இந்த இராச்சிய பாரத்தை உனக்குத் தந்துவிட்டு துறவு பூணக் கருதுகிறேன். இவ் வரசாட்சியை ஏற்று நீ செவ்வனே நடத்துவாயாக. உன்மீது பெரும் பாரத்தைச் சுமத்துகிறேன் என்று நினையாமல் இதை நீ ஒப்புக்கொள்ள வேண்டும். இதுவே உன்னை யான் வேண்டுவது" என்று இராமனைக் குறையிரந்தார் தசரதர்.

கேட்ட இராமனுடைய மனநிலை எவ்வாறிருந்தது? தான் அரசுரிமையை அவசியம் கைக்கொள்ள வேண்டும் என்று ஒரு விருப்பம் அவனுக்கு எழவுமில்லை; தனக்கு அவ் வரசாட்சி வேண்டுவதில்லை என அவன் அதைத் தள்ளவு மில்லை. அரசர் தனக் கிட்ட கட்டளையை மறக்காமல் அதை நிறைவேற்றுவது தன் கடமை என் றுணர்ந்து தன் சம்மதத்தைத் தெரிவித்தான்:

"தாதை அப்பரி(சு) உரைசெயத்
தாமரைக் கண்ணன்
காதலுற்றிலன் இகழ்ந்திலன்
கடன் இதென் றுணர்ந்து
யாது கொற்றவன் ஏவிய(து)
அதுசெயல் அன்றோ
நீதி எற்கென நினைந்துதன்
பணிதலை நின்ருன்."

மகனுடைய சம்மதத்தை யுணர்ந்த தசரதர் அவனைத் தழுவி விடை கொடுத்தனுப்பிவிட்டு, பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் செய்யலானுர். இதனோடு தசரதர் மந்திராலோசனை முடிகிறது.

இவ்வாறு தசரதர் தம் மந்திரிகளையும் இராமனையும் கலந்து அவனுடைய மகுடாபிஷேகத்தை நிச்சயித்த விஷயத்தை ஒரு மந்திராலோசனை என்று சொல்வதற் கிடமில்லை. சக்ரவர்த்தி தாம் முன்னமே தீர்மானித்திருந்த காரியத்தைச் சாதுர்யமாக வெளியிட்டு எல்லோரையும் அதற் கிணங்கச் செய்துவிட்டார்.

இந்தக் கட்டத்தை வான்மீகி முனிவர் எப்படி அமைத்திருக்கிருர் என்று சிறிது பார்க்கலாம். இராமனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்ய வேண்டுமென்று அரச சபையில் சக்ரவர்த்தி தெரிவிக்கிருர். மந்திரிகள் தயக்கமின்றி உடனே சம்மதிக்கிருர்கள். "ஆம் அரசே, நீர் கிழவராய் விட்டீர், இராமனுக்கு முடி சூட்ட வேண்டுவது அவசியந்தான்" என்று. தசரதர் கேட்கிருர்: "நான் இருக்கிறேனே, நீங்கள் ஏன் இப்போது இராமனை விரும்புகிறீர்கள்?" என்று. அவர்கள் இராமனது அருங் குணங்களை விரிவாக எடுத்துக்கூறி அவனுக்கு மகுடாபிஷேகம் அவசியம் நடைபெற வேண்டுமென்று முடிக்கிருர்கள். பட்டாபிஷேகத்துக்கு வேண்டிய காரியங்களுக்கு வசிஷ்டர் ஏற்பாடு செய்கிருர். பிறகு தசரதர் இராமனை அழைக்கச் சுமந்திரனை அனுப்புகிருர். இராமன் வந்து பிதாவை வணங்கியதும், அவர் அவனுக்குச் சில அறிவுரைகள் கூறி, பட்டாபிஷேகச் செய்தியைச் சொல்லுகிருர். இதைக் கேட்டுக்கொண்டு இராமன் தன் மாளிகைக்குத் திரும்புகிருன். தசரதர் மறுபடியும் சுமந்திரனை அனுப்பி இராமனை வரவழைத்து, அவனிடம் சொல்லுகிருர்: "மனிதர் சித்தம் ஒரே நிலையில் இராது; அடிக்கடி மாறும். ஆகவே, என் மனம் மாறுவதற்கு முன் நீ முடி புனைவது அவசியம். நாளையே பட்டாபிஷேகத்தை நிறைவேற்றிவிடலாம்" என்று வற்புறுத்திக் கூறிவிட்டு இராமனை அனுப்பிவிடுகிருர். இதனோடு முடிகிறது தசரதர் மந்திராலோசனை.

இதை நாம் ஆராயும்போது ஒன்று புலப்படுகிறது: தசரதரும் மந்திரிகளும் பிறரும் இராமனுடைய அனந்தகல்யாண குணங்களை எடுத்தெடுத்துக் கூறிப் பாராட்டி மகிழ்கிருர்கள்; இதைத் தவிர, தசரதரிடமோ வசிஷ்டரிடமோ வேறு யாரிடமோ, சிறப்பாகக் கூறத் தக்க மனிதப் பண்புகள் எவையும் காணப்படவில்லை. இராம பட்டாபிஷேகத்துக்கு அமைச்சரெல்லோரும் தடையின்றிச் சம்மதித்தவுடனே, "ஒருகால், நான் செய்த அரசாட்சி மக்களுக்குப் பிடிக்கவில்லையோ?" என்ற ஒரு சந்தேகம் தசரதருக்குத் தோன்றுகிறது. இவ்வளவு சபலமான மனப்பான்மைபடைத்தவரா இராமனுடைய தந்தை என்று நாம் யோசிக்கிறோம்.

(12-ம் பக்கம் பார்க்க)

## சென்னை ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை; மாலை 4 முதல் இரவு 10-30 வரை.

தமிழில் செய்திகள்:— காலை 7-40 பிற்பகல் 2-00; இரவு 7-35.

### ஜூன் 19உ வியாழன்

1·35—2·00 டி. பாலசுப்பராயலு பாட்டு
5·00—5·45, 8·30—8·55 சம்பந்தமூர்த்தி ஆசாரியார் ஷை
6·30—7·00 வள்ளுவரின் இல்லறம்—நாடகம்
7·50—8·30, 9·30—10·00 ஸ்ரீமதி சென்னம்மா பாட்டு

### 20உ வெள்ளி

5·00—5·45, 6·30—7·00 என். ராஜகோபாலன் பாட்டு
6·05—6·30 கே. வி. தனபால நாயுடு கிளாரினெட்
7·50—8·30, 8·45—9·15 திருச்சியில் உள்ளபடி

### 21உ சனி

5·00—5·45, 6·30—7·00 எச். எம். வி. மதராஸ் ஸ்டுடியோ வாத்யகோஷ்டி
7·50—9·00 பாபா வெங்கடராமையா வயலின்

### 22உ ஞாயிறு

2·10—2·40, 5·00—5·45 ஆர். எஸ். ரங்கப்பா வீணை
4·00—4·30 கோபாலசாமி பாட்டு
6·05—6·30 கலாபாஷிணி—நாடகம்
6·30—7·00, 7·50—8·30 ஸ்ரீமதி வசந்தகோகிலம் பாட்டு
8·30—9·00, 9·30—10·00 மன்னார்குடி ராஜகோபால் பிள்ளை பாட்டு

### 23உ திங்கள்

1·35—2·00 எஸ். சங்கரன் பாட்டு
5·00—5·45 வெங்கடராம சாஸ்திரி வயலின்
6.05—6·30, 7·50—8·30 ஸ்ரீமதி சொக்கம்மா வீணையும் பாட்டும்
8·30—9·00, 10·00—10·30 கே. தக்ஷிணாமூர்த்தி ஓதுவார்—தேவாரம்

### 24உ செவ்வாய்

1·35—2·00 ஸ்ரீமதி சௌந்தரவல்லி பாட்டு
5.00—5·45, 7·50—8·30 இவனூர் மீனாக்ஷி சுந்தரம் பிள்ளை பாட்டு
8·30—9·00, 9·30—10·00 ஸ்ரீமதி வேதவல்லி பாட்டு

### 25உ புதன்

1·35—2·00, 6·30—7·00 ஸ்ரீமதி ராஜம் பாட்டு
5·00—6·00 ஏழுமலைப்பிள்ளை நாதசுரம்
7·50—9·00 திருச்சியில் உள்ளபடி

### 26உ வியாழன்

1·35—2·00 டி. எஸ். ஹரிராவ் வயலின்
5·00—5·45, 8·45—9·15 எஸ். பினாகபாணி பாட்டு
7·50—8·30, 9·30—10·00 ஸ்ரீமதி சோலார் ராஜம் பாட்டு



## ஆபாசமான விளம்பரங்களைத் தடுக்க

### சிங்கப்பூரில் மசோதா

சிங்கப்பூர், மே 24—

துன்மார்க்க வியாதிகளால் கஷ்டப்படுவோருக்கு சிகிச்சையளிப்பதாகக் கூறும் விளம்பரங்களைத் தடுப்பதற்கான சட்டமொன்றைக் காலனியில் அமுலுக்குக் கொண்டுவரத் தீர்மானித்திருக்கிறார்கள். பகிரங்கமான ஓரிடத்தில் ஆபாசமான விவரங்களோ, படங்களோ அடங்கிய விளம்பரங்கள் ஒட்டப்படுவதைத் தடுப்பதே ஷை மசோதாவின் நோக்கமாகும். ஷை நோய் சிகிச்சையில் தேர்ச்சிபெறாத சில்லறைப் பேர்வழிகளின் சிகிச்சையால் ஏற்படக்கூடிய தீங்கை பிரத்தியேகமாகக் குறிப்பிடவேண்டிய தேவையில்லை யென்றும், அத்தகையோரின் அலுவல்களைத் தடுப்பதே ஷை மசோதாவின் நோக்கமென்றும் தொடுவாய்நாட்டு அட்டர்னி-ஜெனரலான ஸ்ரீ வி. ஜி. ஹார்வெல் கூறுகிறார்.

ஷை சட்ட விதிகளை மீறுவோர் ஒரு வருஷத்திற்கு மேற்படாத சிறைத் தண்டனைக்கோ அல்லது 500 வெள்ளி வரை அபராதத்திற்கோ அல்லது இரண்டிற்கோ உள்ளாவார்கள். வீடு, சுவர், மரம் முதலிய பகிரங்கமான எந்த இடத்திலாவது ஆபாசமான படத்தை வைத்தாலும், அல்லது ஆபாசமான விவரங்களை எழுதினாலும், அல்லது ஆபாசமான விவரங்கள் அச்சிடப்பட்ட காகிதங்களை ஒட்டினாலும் அத்தகையோர் 50 வெள்ளிக்கு மேற்படாமல் அபராதம், அல்லது 1 மாதத்திற்கு மேற்படாமல் சிறை அல்லது இரண்டிற்கும உட்படுவார்கள். அத்தகைய விவரங்களையோ அல்லது படங்களையோ கொடுப்பவர்கள் 100 வெள்ளி அபராதம் அல்லது மூன்று மாதத்திற்கு மேற்படாமல் சிறை அல்லது இரண்டிற்கு முட்படுவார்கள். ஷை சட்டத்தின்கீழ் குற்றம் செய்வோரை எந்த போலீஸ் அதிகாரியும் வாரண்டு இல்லாமலே கைதுசெய்யலாம்.

## ஜேபிக்குள் அடங்கும் டப்பி அடுப்பு

### போர்வீரர்கள் உபயோகிக்கலாம்

அடுப்பெரிக்கும் வேலைக்கு, விஞ்ஞான தொழில் ஆராய்ச்சி போர்டார் புதிய எரிவஸ்து ஒன்றைக்கண்டுபிடித்திருக்கிறார்கள் "டாமீஸ் குக்கர்" என்று இதற்குப் பெயர். ஸ்பிரிட்டையும் எரியக்கூடிய இதர வஸ்துக்களையும் சேர்த்து இதைச் செய்திருக்கிறார்கள். இதில் உபயோகிக்கப்படும் வஸ்துக்கள் எல்லாம் இந்தியாவில் கிடைப்பவையேயாகும்.

கட்டியாய் இருப்பதால் இதைக் கஷ்டமில்லாமல் சாப்பாட்டோடு கூடவே பையில் கொண்டுபோகலாம். ஜேபியில் அடங்கக்கூடிய அளவுள்ள ஒரு டப்பி பனிரண்டு மணி நேரம் எரியும். பற்றவைப்பதும் வெகு சுலபம். சிகரெட் பற்றவைப்பது போல் ஒரு நொடியில் பற்றவைத்து விடலாம். அந்த டப்பிமீதே சாமான்களை வைத்துச் சமைப்பதற்கு வாட்டமான ஏற்பாடும் இருப்பதால் இது மிகவும் சௌகரியமாயிருக்கிறது.

ராணுவத் தலைமை நிலையத்தார் பரீட்சார்த்தமாக 10,000 டப்பிகளுக்கு ஆர்டர் கொடுப்பார்களென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதை உற்பத்தி செய்வதற்குப் பிரமாதமான யந்திரமெல்லாம் ஒன்றும் வேண்டியதில்லை. மேலும் டப்பிகளையும் திரும்பத் திரும்ப உபயோகிக்கலாம். ஆகவே இதை உற்பத்தி செய்யும் செலவும் மிகக் குறைவாகவே இருக்கிறது.

## திருச்சி ரேடியோ

ஒலி பரப்புகள்:— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1 முதல் 2-30 வரை, மாலை 5 முதல் இரவு 10 வரை.

தமிழில் செய்திகள்:— காலை 7-40; பிற்பகல் 2-00; இரவு 7-35.

### ஜூன் 19உ வியாழன்

1·35—2·00 ஸ்ரீமதி ஆர். பட்டம்மாள் பாட்டு
5·15—6·00, 7·50—8·30 டி. கே. ஜயராம ஐயர் வயலின்
6·05—6·30, 8·40—9·20 கே. வரதாச்சாரியார் பாட்டு

### 20உ வெள்ளி

1·35—2·00 வெங்கடகிருஷ்ணன் பாட்டு
5·15—6·00 திருக்குவளை அருணாசலம் பிள்ளை நாதசுரம்
7·50—8·30, 8·45—9·20 சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை பாட்டு, டி. கே. ஜயராமய்யர் வயலின், குத்தாலம் சிவவடிவேல் பிள்ளை மிருதங்கம்

### 21உ சனி

1·35—2·00, 8·30—9·20 திருக்கோயிலூர் கிருஷ்ணமூர்த்தி ஐயர் பாட்டு
5·15—6·00, 7·50—8·30 ஸ்ரீமதி சந்திரம்மா ஷை
6·05—6·30 ஜி. கிருஷ்ணமூர்த்தி வீணை

### 22உ ஞாயிறு

1·35—2·00 குன்னக்குடி வெங்கடராமயர் புல்லாங்குழல்
5·15—6·00 எம். என். வெங்கடவரத பிள்ளை பாட்டு
7·50—9·00 சென்னையில் உள்ளபடி
9·00—9·15 கிரும்பலை—கம்பராமாயணம்

### 23உ திங்கள்

1·35—2·00, 6·05—6·30 ஸ்ரீமதி சரஸ்வதி பாட்டு
5·15—6·00, 7·50—8·50 மாரியப்பசாமி ஷை

### 24உ செவ்வாய்

1·35—2·00 குமாரி ஜானகி பாட்டு
5·15—6·00, 7·50—8·30 எஸ். கோவிந்தராஜபிள்ளை நாதசுரம்
8·40—9·20 செல்லப்பிள்ளை ஐயங்கார் பாட்டு

### 25உ புதன்

1·35—2·00 வி. சுந்தரேசன் வயலின்
6·05—6·30 டி. கே. வெங்கடாசலம், பி. பி. வைத்யநாதன் பாட்டு
7·15—7·30 'அச்சுக்கோப்பவர்'—'சுகி'
7·50—9·20 காரைக்குடி சாம்பசிவ ஐயர் வீணை, ஷை முத்து ஐயர் மிருதங்கம்.

### 26உ வியாழன்

1·35—2·00, 7·50—8·30 குமாரிகள் லக்ஷ்மியும் வேதமும் பாட்டு
6·15—6·00, 8.45—9·20 ஜி. நாகராஜ ராவ் வீணை

## நடப்புவட்டி விகிதங்கள்.

| மாதம் | நாள் | சென்னை | இரங்கூன் | பினாங்கு | சிங்கப்பூர் | செய்கோன் |
|---|---|---|---|---|---|---|
| விக்கிரம வைகாசி | 31 | 0-6-6 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 |
| ஆனி | 32 | 0-6-3 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-6 |
| ஆடி | 31 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-6 |
| ஆவணி | 31 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-6 |
| புரட்டாசி | 31 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| ஐப்பசி | 30 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| கார்த்திகை | 29 | 0-6-0 | 0-4-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| மார்கழி | 30 | 0-6-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| தை | 29 | 0-6-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| மாசி | 30 | 0-6-0 | 0-4-9 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| பங்குனி | 30 | 0-6-0 | 0-5-0 | 0-4-0 | 0-4-0 | 0-3-0 |
| விஷு சித்திரை | 31 | 0-6-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 | — |







## சென்னை நகர் பாதுகாப்புப் படை

நாகூரில் சென்னை சிவிக் கார்டு படையைச் சேர்ந்தவர்கள் இருவர் உயிருக்குத் துணிந்து போய் ஒரு திருடனைப் பிடித்திருக்கிறார்கள். திருடன் அவர்களைக் கத்தியால் குத்திவிடுவதாகப் பயமுறுத்தியிருக்கிறான். ஆனால் அவர்கள் அதற்கு அஞ்சாமல் அவனைத் துரத்தியிருக்கிறார்கள். இப்படித் துரத்தியதில் இருவரில் ஒருவருக்குக் கத்திக் குத்தும் ஏற்பட்டுவிட்டது. ஆனால் கடைசியில் திருடன் பிடிபட்டுத் தண்டனையும் விதிக்கப்பட்டான். அவனைப் பிடித்த தீரர்களுக்குப் போலீஸார் வெகுமானமளித்திருக்கிறார்கள்.

தற்போது சென்னையில் சுமார் 11,000 சிவிக் கார்டுகள் இருக்கிறார்கள். இவர்கள் உற்சவ காலங்களிலும் திருவிழாக் காலங்களிலும் வண்டிப் போக்கு வரத்தை ஒழுங்கு படுத்துவதிலும் கூட்டங்களைச் சமாளிப்பதிலும் போலீஸாருக்குப் பெரி

[4-ம் பத்தி பார்க்க]



## திரு. லட்சுமணன் செட்டியார் அவர்கள் ஜே. பி.

### கிள்ளானில் பாராட்டு விருந்து

24—5—41 சனிக்கிழமை மாலை 4-30 மணிக்கு கிள்ளான் நாட்டுக் கோட்டைச் செட்டியார்களால் திரு. ஆர். எம். எம். எல். லட்சுமணன் செட்டியார் ஜே. பி. அவர்கட்கு ஒரு பாராட்டு விருந்து சிறப்பாக நடத்தப் பெற்றது. விருந்துக்கு டிஸ்டிரிக்ட் ஆபீசர் முதல் பல பிரமுகர்கள் வந்திருந்தனர். செட்டியார்கள் சங்கத் தலைவர் திரு. மு. ராம. பழனியப்ப செட்டியாரவர்கள் திரு. லட்சமணன் செட்டியாரவர்கட்கு மலர்மாலை அணிவித்து பாராட்டிப் பேசினார்கள். பின் ஐ. ம.

திரு. ஆர். எம். எம். எல். லட்சுமணன் செட்டியார் ஜே. பி.

செட்டியார்கள் வர்த்தக சங்கக் காரியதரிசி திரு. இராமசாமிச் செட்டியார் பி. ஏ., அவர்கள் ஆங்கிலத்தில் பேசும் போது அடியில் வருமாறு குறிப்பிட்டார்கள்:—

திரு. லட்சுமணன் செட்டியாரவர்கட்கு மே. த. சிலாங்கூர் சுல்தான் அவர்கள் மனமுவந்து சமாதான நீதிபதிப் பட்டம் அளித்திருக்கிறார்கள். இந்தப் பட்டத்திற்கு இவர்களை விடச் சிறந்த நபரைத் தெரிந்தெடுத்திருக்க முடியாது. திரு. லட்சுமணன் செட்டியாரவர்கள் செய்திருக்கும், செய்து வரும் சேவை எல்லோரது பாராட்டையும், அங்கீகாரத்தையும் ஈர்க்கத்தக்கது. ஆகலால் அவர்கள் ஜே. பி. பட்டம் பெற்றதில் ஆச்சரியமில்லை. இந்தப் பட்டத்தை வழங்கி திரு. லட்சுமணன் செட்டியார் அவர்களையும், அவர்கள் மூலமாகச் செட்டியார்கள் சமூகத்தினரையும் பெருமைப்படுத்தியதற்கு ஐ. ம. நாட்டுக் கோட்டைச் செட்டியார்கள் வர்த்தக சங்கச் சார்பில் மே. த. சுல்தான் அவர்கட்கு எனது மனப்பூர்வமான வந்தனத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சர்க்கார் ஹைஸ்கூல் தலைமை உபாத்தியாயர் திரு. வி. கே. சின்னையா அவர்கள் பேசிய பின்பு மலாக்கா 'தமிழ்க் கொடி' ஆசிரியர் திரு. உ. அரு. அருணாசலம் செட்டியார் அவர்கள் திரு. லட்சுமணன் செட்டியாரவர்களையும், அவர்கட்குப் பட்டமளித்த சுல்தான் அவர்களையும் பாராட்டிப் பேசினார். அப்பால் மலாக்கா திரு. ராம. அழ. சிதம்பரம் செட்டியாரவர்கள் பேசும் போது அடியில் வருமாறு குறிப்பிட்டார்கள்:—

நம் விருந்தினர் லட்சுமணன் செட்டியாரவர்கள் சமூகத் தொண்டிலும், பொது ஜன சேவையிலும் சிறந்தவர்கள்; இன்று மட்டுமல்ல, சுமார் 20 ஆண்டுகட்கு முன் தோன்றிய ஊழியர் சங்கத்திலேயே பெருந் தொண்டாற்றியவர்கள். அவர்கட்கு ஜே. பி. பட்டம் கிடைத்தது போற்றற்குரியது.

கடைசியில் விருந்தினர் பதிலளிக்கும் போது, எதிலும் வேற்றுமை பாராட்டுவதென்ற எண்ணம் தம்மிட மில்லையென்றும், தொழிலாளர்க்காகத் தம்மால் ஆன தொண்டைச் செய்யக் கடமைப்பட்டிருப்பதாயும், தம்மைப் பாராட்டிய நகரத்தார்களுக்கும், மற்றோர்களுக்கும் நன்றி தெரிவிப்பதாகவும் குறிப்பிட்டார். மாலை 6.30 மணிக்கு வைபவம் முடிந்தது.



## கண்டவராயன்பட்டி பணிச்சாருடையவர் தர்ம கலாசாலை.

இக்கலாசாலையின் 11-வது ஆண்டு விழா 31-5-41ல் இராமநாதபுரம் ஜில்லாக் கல்வி-அதிகாரி திரு. M. D. பால் M. A., L. T., அவர்கள் தலைமையில் நடைபெற்றபோது எடுக்கப்பட்ட படம்.

[1-ம் பத்தி தொடர்ச்சி]

தம் உதவி செய்திருக்கிறார்கள். பட்டணங்களில் இவர்கள் இராக் காலத்தில் போலீஸாரோடு சேர்ந்து ரோந்து வேலை செய்திருக்கிறார்கள். இதுவரைப் பெரும்பாலும் நடுத்தர வகுப்பினரே இந்தப் படையில் சேர்ந்திருக்கின்றனர். தனவந்தர்களான ரயத்துக்கள், மிலச்சுவான்தார்கள், வியாபாரிகள், தொழில்களில் ஈடுபட்டுள்ளவர்கள் ஆகிய பல வகையான மக்கள் இதில் இருக்கின்றனர். பொதுவாக, இவர்களெல்லாம் நல்ல புத்திசாலிகளாகவும் கல்வியறிவும் ஆர்வமும் உடையவர்களாகவு மிருக்கிறார்கள்.

இவர்களுக்கு மற்ற பயிற்சிகளோடு, படையணிவகுப்பு, லத்தீ ட்ரில், காயமுற்றவர்களுக்குச் செய்யும் முதல் சிகிச்சை முதலியவற்றிலும் பயிற்சி அளிக்கப்படுகிறது; சாதாரணமான சட்டங்களும் போலீஸ் சட்ட திட்டங்களும் போதிக்கப்படுகின்றன.

சென்னை நகரத்தில், விளக்கணைப்புச் சம்பந்தமான கட்டுப்பாடுகளைக் கவனிப்பது, பாராக் கொடுப்பது, மொஹர்ரம் முதலிய பெரிய திருவிழாக்களில் கூட்டங்களைச் சமாளிப்பது, ஆகிய இவைபோன்ற வேலைகளையும் படையெடுப்பின்றிச் செய்யும் இதர வேலைகளையும் இவர்கள் செய்து வந்திருக்கிறார்கள்.

### இலங்கை கரன்ஸி நோட்டுகள்

இலங்கை சர்க்காருக்காகக் கரன்ஸி நோட்டுகளை அச்சிட்டுக் கொடுக்க இந்திய சர்க்கார் ஒப்புக்கொண்டிருப்பதாகத் தெரிகிறது. முதல் தடவையாக லக்ஷத்து 54 ஆயிரத்து 765 ரூ. மதிப்புக்கு நோட்டுகள் அச்சிடப்படும் என்று தெரிகிறது.

## :: மதிப்புரை ::

### மகாத்மா காந்தி

[ஆங்கிலத்தில் தொகுத்தவர்: ஸர் எஸ். ராதாகிருஷ்ணன் எம். ஏ. மொழி பெயர்த்தவர் திரு. சாமிநாத சர்மா. பக்கம்: 685. பிரசுரித்தோர்: புது மலர்ச்சி நூற்பதிப்புக் கழகம், இரங்கூன். விலை: ரூ 3.]

1939-ம் வருஷம் காந்தியடிகளின் எழுபதாவது வருஷக்கொண்டாட்டம் கொண்டாடப்பட்டபோது, அவருக்குக் காணிக்கையாக ஸர் ராதாகிருஷ்ணன் அவர்கள் ஒரு நூலைச் சமர்ப்பித்தார். இந்நூலுக்கு உலக அறிஞர்கள் பலர், காந்தியடிகளின் வாழ்க்கையைப்பற்றியும், அவருடைய அரசியல் போக்கைப்பற்றியும் விமரிசனம் செய்து பல கட்டுரைகள் எழுதினார்கள். இந்நூலே தமிழில் மொழி பெயர்த்து வெளியிடப்பட்டிருக்கிறது. ஸ்ரீ ராதாகிருஷ்ணன் அவர்களது நிபந்தனைப்படி இதிலிருந்து கிடைக்கும் லாபமெல்லாம், இங்கிலாந்திலே படிக்கும் இந்திய ஏழை மாணவர்கட்கு உதவப்படுவதும் பாராட்டத்தக்கது.

இந்நூலில் அறுபத்து மூன்று கலைஞர்கள் அறுபத்து மூன்று நினுசாகக் காந்தியடிகளைப் பார்த்து, தங்கள் தங்கள் மனத்திற்பட்டதை வரைந்திருக்கின்றார்கள். இந்த அறுபத்து மூவரும் சாதாரணப் பேர்வழிகளல்ல. முதலில் 'காந்தியடிகளின் மதமும் அரசியலும்' என்பதுபற்றி ஸர் ராதாகிருஷ்ணன் எழுதியிருக்கின்ருர். பிரபல கணித நிபுணரான ஈன்ஸ்டீன், பிரபல ஆங்கில ஆசிரியரான லாரென்ஸ் ஹவுஸ்மான், மைசூர் மாஜி திவான் ஸர் இஸ்மெயில், டாக்டர் மேரியா மாண்டிஸ்ஸோரி 'ஸ்டேட்ஸ்மன்' ஆசிரியர் ஆர்தர் மூர், ஜப்பானியக் கவி யோனே நோகுச்சி, பிரபல பிரஞ்சு அறிஞர் ரோமெய்ன் ரோலந்து, லார்டு சாமுயேல், லார்டு ஸாங்கே, தென் ஆப்ரிக்க யூனியன் மந்திரி ஸ்மட்ஸ், கவியரசர் டாகூர், லார்டு ஹாலிபாக்ஸ் (மாஜி இந்திய வைஸ்ராய்), அப்டன் சிங்ளேர் முதலிய பற்பல தேசத்துப் பிரபலஸ்தர்களும் இத்தொகுதியில் காந்தியடிகளுக்குத் தங்கள் தங்கள் காணிக்கையைச் செலுத்தியிருக்கிருர்கள். இந்தியாவின் தவப்புதல்வர், உலகம் போற்றும் உத்தமர் மகாத்மா காந்தியை உலகத்தோர் எவ்வெவ் விதத்தில் மதிக்கிருர்கள், பாராட்டுகிருர்கள் என்பதை இந்நூல் நமக்கு ஒரு கண்ணாடிபோல் காட்டத்தக்கது. தமிழர் படித்தறிவதற்காகவே, இப்பெரு நூலை சிரமம் கருதாது புது மலர்ச்சி நூற்பதிப்புக் கழகத்தார் மொழி பெயர்த்துக் குறைந்த விலைக்கு விற்க முன் வந்துள்ளனர். எல்லோரும் புரிந்து கொள்ளக்கூடிய எளிய நடையில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. காந்தியடிகளுடைய உருவப் படத்துடன் நூல் அழகுறத் தொகுக்கப்பட்டிருக்கிறது.

### காந்தித் தாத்தா கதை

[எழுதியவர்கள்: ஸ்ரீமதி காவேரி வெங்கட்ராமன், ஸ்ரீ எஸ். ஆர். வெங்கட்ராமன். பக்கம்: 54. பிரசுரித்தோர்: சக்தி காரியாலயம், ஜார்ஜ் டவுன், சென்னை. விலை: அணு 8.]

எளிய நடையில, மாணவர்களுக்கென்றே எழுதப்பட்டிருக்கிறது. பள்ளிக்கூடப் பாடப் புத்தகமாக வைப்பதற்கு அதிகாரிகள் ஆட்சேபிப்பதற்கு இடமில்லை. மற்றவர்களும், முக்கியமாகப் புதிதாகக் கற்கும் முதியோர்களும் படித்துப் பயன்பெறலாம். அழகிய வர்ணப் படமும், இன்னும் பல அருமையான படங்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. நல்ல காகிதத்தில், பெரிய எழுத்தில், பிழையின்றி அழகுற அச்சிட்டிருக்கிருர்கள்.

### ஹிந்து—முஸ்லிம் ஒற்றுமை

[ஆசிரியர்: டி. எப். ஆர். மஹ்வி சாஹிப் (பாஃவி). பக்கம்: 152. விலை: அணு 8. வெளியிட்டோர்: லோக சக்தி பிரசுராலயம், 21-A செனத் கூவம் ரோட், மௌண்ட் ரோட் போஸ்டு, சென்னை.]

இது ஒரு அரசியல் ஆராய்ச்சி நூல். ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை ஏற்பட்டால்தான் நாடு க்ஷேமமுற முடியுமென்பதை இந்நூலாசிரியர் நன்கு அறுதியிட்டுரைக்கின்ருர். இதற்கு அனுகுணமாக திருகுர்ஆன் மேற்கோள்கள் பல எடுத்துக்காட்டப்படுகின்றன.

### புலமை வித்தக போதினி

[ஆசிரியர்: திரு. சு. அ. இராமசுவாமி அவர்கள். பக்கம்: 156. விலை ரூ 1-8-0. கிடைக்குமிடம்: ஷை ஆசிரியர், பலவான்குடி இராமநாதபுரம் ஜில்லா.]

தமிழ் கற்க விரும்புவோர், தங்கள் தங்கள் இருப்பிடங்களிலிருந்து கொண்டே, பிறருடைய உதவியின்றிக் கற்றுக் கொள்ளத் தக்கவாறு, ஐந்து இலக்கணங்களும் எளிதில் விளங்குமாறு இந்நூலில் மேற்கோள்கள், உதாரணங்களுடன் விளக்கப்பட்டிருக்கின்றன. செய்யுள் இலக்கணம் மிகத் தெளிவாக எழுதப்பெற்றிருக்கிறது. மாணவரும் மற்றையோரும் படித்துப் பயன்பெறலாம்.

### எதிர்பாராத முத்தம்

[ஆக்கியோர்: பாரதி தாஸன் அவர்கள் பக்கம்: 80. விலை: அணு 8. வெளியிட்டோர்: வானம்பாடி நூற்பதிப்புக் கழகம், நெமந்தக் காரத்தெரு, சின்ன காஞ்சிபுரம்.]

பொன் முடி என்ற வணிகன் மகனும் பூங்கோதையும் காதல் கொள்கின்றனர். இருவரையும் ஓரிடத்தில் கண்ட பூங்கோதையின் தந்தை பொன் முடியை மரத்தில் கட்டிவைத்து அடித்துத் துரத்தி விடுகிருன். பூங்கோதை வீட்டிலேயே சிறை வைக்கப்படுகிருள். பண்டார வேஷம் போட்டுப்பொன்முடி பூங்கோதையைச் சந்திக்கிருன். விஷயமறிந்த பொன்முடியின் தந்தை, அவனை முத்து விற்று வரும்படி வடநாட்டுக்கு அனுப்பிவிடுகிருன். பூங்கோதை பிரிவாற்ருது, வாடி, வதங்கிப் பின் தைரியமுற்று பொதி மாட்டுக்காரருடன் தானும் வடநாடு சென்ருள்.

பொன் முடி முதலிய தமிழர்களிடம் வடநாட்டு ஆரியர் யாகத்துக்குப் பொருளுதவி கோர, அவர்கள் யாகத்தை இழித்துக் கூறிப் பொருள் கொடுக்க மறுக்கவே, ஆரியர்கள் கோபமுற்றுத் தமிழர்களிற் பலரைக் கொன்றனர்; அவரது பொருள்களைக் கொள்ளை யடித்தனர். ஆனால் பொன் முடி மட்டும் தப்பிவிட்டான். இத்தனைக்கும் காரணம் இவன்தானென்று சிலர் அவனைத் தொடர்ந்து செல்கின்றனர். ஓரிடத்தில் பொன் முடியும் பூங்கோதையும் சந்திக்கின்றனர். ஆவலோடு காதலன் மீது தாவுகிருள் கோதை. அத்தருணம், மரத்தின் மறைவிலிருந்து பாய்ந்த கத்தி பொன் முடியின் உடலைப் பிரிக்க அவன் கையில் தலைமட்டும் இருக்கிறது. அதற்கு அவள் கடைசி முத்தம் ஈந்துவிட்டுத் தானும் உயிர்விடுகிருள்.

"சீர்தமிழர் உயர்வினுக்குச்
செத்தான்! அன்பன்
செத்ததற்குச் செத்தாள் அத்
தென்ருட் டன்னம்"

என்று ஆசிரியர் கூறுகின்ருர்.

இந்தச் செய்திகள் பெற்ருேருக்கு எட்ட, அவர்கள் தருமபுரம் பண்டார சந்நிதியிடம் விண்ணப்பிக்கிருர்கள். அவர் குமர குருபரர் மகத்துவத்தை யெடுத்துக் கூறி, வட நாட்டாருக்குச் சைவ சமயத்தைப் போதித்து வரும்படி அனுப்புகின்ருர். இது தான் கதை. இதை பாரதிதாசன் அவர்கள் ஒரு இனிய கவிதையாகச் சிருஷ்டித்திருக்கிருர் தமது அழகிய கவிகளால். அவரது கவியின் பெருமை தமிழ்நாடு அறிந்தது. விளக்கப்படங்களுடன் சிறந்த பதிப்பாக வானம்பாடி நூற்பதிப்புக் கழகத்தார் இதை வெளியிட்டிருக்கிருர்கள். தமிழர்கள்—ஆடவரும் பெண்டிரும் படித்துத் தமிழினிமை துய்ப்பாராக.

### இரவுசேரி நாட்டார் சங்கம்

11-6-41 மாலை 6-மணிக்கு சங்கக் கட்டிடத்தில் ஷை சங்க அங்கத்தினர்கள் மாஜித் தலைவர் ஸ்ரீ கரு. குப்புச்சாமி சேர்வை அவர்கள் தலைமையில் கூடி அடியில் கண்டவர்களை நிர்வாகஸ்தர்களாகத் தேர்ந்தெடுத்தார்கள்: தலைவர் ஸ்ரீ பெரி. கா. சொக்கலிங்கம் சேர்வை; உபதலைவர் ஸ்ரீ கரு. காளையப்பச் சேர்வை; காரியதரிசி ஸ்ரீ சித. பெரியசாமி சேர்வை; உபகாரியதரிசி ஸ்ரீ கரு. சொக்கலிங்க அம்பலம்; பொக்கிஷதார் ஸ்ரீ சீ. சிவசாமி சேர்வை.









## இந்தியப் பிரச்னையைத் தீர்க்க

### ஸர் க்ரிப்ஸ் இந்தியா வருவாரா?

இந்தியப் பிரச்னையைப்பற்றி பார்லிமெண்டில் விவாதத்தைக் கிளப்ப தொழிற்கக்ஷி கன்சர்வேடிவ் கக்ஷியினர்கள் சிரத்தைகொண்டிருப்பதாக லாகூர் 'ட்ரைப்யூன்' பத்திரிகையின் லண்டன் நிருபர் எழுதியிருக்கிருர்.

இந்தியப் பிரச்னையைப் பிரிட்டிஷ் சர்க்கார் தீர்த்து வைக்காமலிருப்பதுபற்றி தொழிலாளர் இயக்கத்தில் சம்மந்தப்பட்டிருப்பவர்கள் அனைவரும் மிக்க கவலைகொண்டிருப்பதாகவும் ஆப்ரிக்கா யுத்தத்தில் இந்தியத் துருப்புகள் காட்டிய தீரமும் சாமர்த்தியமும் காமன்ஸ் சபையிலுள்ள கன்சர்வேடிவ் மெம்பர்களிலேயே ஏராளமான பேர்களின் மனதைக் கவர்ந்திருக்கிறதென்றும் போன வருஷத்தைக் காட்டிலும் இப்பொழுது தேசிய உணர்ச்சித அதிகமாக இணங்க வேண்டுமென்ற எண்ணம் ஏற்பட்டிருக்கிறதென்றும் ஸர் ஸ்டாபர்ட் கிரிப்சை இன்னொரு தடவை இந்தியாவிற்கு அனுப்ப வேண்டுமென்று சிலர் அபிப்ராயப்படுவதாகவும் இந்தத் தடவை அவர் உத்யோக முறையில் வர வேண்டுமென்றும் முன்னொரு தடவை அவர் இந்தியாவிற்கு வந்து பார்த்துவிட்டு இந்தியாவில் காங்கிரஸ் தான் முக்ய ஸ்தானம் வகித்து வருகிறதென்பதை அங்கீகரித்தால்தான் இந்தியப் பிரச்னையை தீர்க்க முடியுமென்று அவர் அப்பொழுது சேம்பர்லேன் பிரபுவிடம் கூறியதாக நம்பப்படுகிறதென்றும் ஆப்கனிஸ்தானத்தில் நாஸிகளின் செல்வாக்கு சிறிது சிறிதாக ஓங்கி வருவது இந்தியப் பிரச்னையைத் தீர்த்துவிட வேண்டுமென்று காமன்ஸ் சபையில் மெம்பர்களில் பலர் எண்ணுவதற்கு ஓர் காரணமென்றும் மேற்படி நிருபர் கூறுகிருர்.

## மைசூர் காங்கிரஸ் கமிட்டி

★

### ஆட்சி முறையில் நம்பிக்கையில்லை

மைசூர் சமஸ்தான காங்கிரஸ் காரியக் கமிட்டி பத்திரிகைகளுக்கு அனுப்பியுள்ள ஒரு அறிக்கையில் தற்பொழுதுள்ள சமஸ்தான ஆட்சி முறையில் மைசூர் மகாஜனங்கட்கு நம்பிக்கையில்லை என்றும் மகாராஜா ஆதரவின் கீழ் பொறுப்பாட்சி வழங்கப்பட்டால் தான் பொது ஜனங்களுக்கு திருப்தி ஏற்படுமென்றும் புதிய அரசியல் முறை அமுலுக்கு வந்த பிறகாவது கவர்மெண்டார் பொதுஜன அபிப்ராயங்களை மதித்து நடப்பார்கள் என்ற எண்ணம் பலிக்கவில்லை யென்றும் சட்டசபைக்கும் சர்க்கார் சிலரை நியமனம் செய்திருக்கும் முறையையும் உத்யோகப் பற்றற்ற மந்திரிகளையும் சட்டசபைத் தலைவரையும் பொறுக்கி எடுக்கும் முறையையும் பார்த்தால் இது தெளிவாகின்றதென்றும் குறிப்பிட்டிருக்கிறது.

### யுத்த செலவுக்கு 5 லக்ஷம்

மேன்மை தங்கிய மன்னர் பிரானின் பிறந்தநாட் கொண்டாட்டத்தில் மைசூர் மகாராஜா தமக்குள்ள சந்தோஷத்தையும் நன்றியறிதலையும் தந்தி மூலம் தெரிவித்துக்கொண்டார். மன்னர் பிரான் யுக்தமான முறையில் யுத்தத்துக்கு செலவிட்டுக் கொள்ளலாமென்று 5 லக்ஷம் ரூ. நன்கொடையளித்துள்ளார்.



## பிரிட்டனின் ரகசிய ஆயுதம்

### கண்ணுக்குத் தெரியாமல் கடுஞ்சேதம் விளைவிக்கும்

பிரிட்டிஷ் ராணுவம் சீக்கிரம் ஒரு ரகசிய ஆயுதத்தைப்பெறலாம். இதனை பிரிட்டிஷ் ராணுவ என்ஜினிரிங் ஆபீசர்களுள் ஒருவர் கண்டுபிடித்திருக்கிருர். இவருக்கு வயது 24 ஆகிறது. 2 வருஷங்களுக்கு முன்பு தான் இவர் கேம்பிரிட்ஜில் மெக்கானிகல் என்ஜினியரிங்கில் ஆனர்ஸ் பட்டம் பெற்ருர். இந்த ரகசிய ஆயுதத்தின் தன்மையை எடுத்துரைக்க முடியாது. ஆனால் ஜெர்மன் முன்னணிப் படைகளுக்கு இது தக்க ஜவாப் அளிக்குமென்று பிரிட்டிஷ் ராணுவத்திலுள்ள உயர்தர உத்யோகஸ்தர்கள் நம்புகிருர்கள். இந்த ஆயுதம் கண்ணுக்குத் தெரியாமல் கடும் சேதம் விளைவிக்க வல்லதென்று வருணிக்கப்படுகிறது.

### ராமனுதபுரம் ஜில்லாவில் சத்யாகிரகிகள்

சென்ற வருஷம் மே மாதம் முடிய சத்யாக்ரகம் செய்தவர்களின் எண்ணிக்கை 217. பாதுகாப்புச் சட்டப்படி தண்டனையடைந்தவர்கள் 47. கிரிமினல் ஆக்டின்படியும் டிராபிக் ரூல்ஸ்களின்படியும் தண்டிக்கப்பட்டவர்கள் 38. கால் நடையாக டில்லி பிரயாணத்தை மேற்கொண்டவர்கள் 127. மொத்தம் விதிக்கப்பட்ட அபராதத் தொகை ரூ 11897 என்று ராமனுதபுரம் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி மானேஜர் ஸ்ரீ எம். ராமகிருஷ்ணன் அறிவிக்கிருர்.

### உத்தியோக மாற்றம்

ராமனுதபுரம் ஜில்லா அபிஷியல் ரிசீவர் ராவ்சாஹிப் ஆர். கிருஷ்ணய்யருக்குப் பதிலாக நியமிக்கப்பட்டிருக்கும் அட்வகேட் ஸ்ரீ எம். எஸ். பார்த்தசாரதி அய்யங்கார் ஜூன் 11வயில் தமது பதவியை ஏற்றுக் கொண்டார்.

# குமரன்

காரைக்குடி
விஷு-ஆனி-மீ 6உ

## தாழ்த்தப்பட்டோர் கல்வி

தாழ்த்தப்பட்டுக் கிடக்கும் மக்களை உயர்த்த வேண்டுமென்று செய்யப்பட்டு வரும் முயற்சி புதிதன்று. நாயன்மார், காலம், ஆழ்வார்கள் காலம் முதல் நடந்து தான் வருகிறது. இரக்கமும் பெருந்தன்மையும் பரோபகாரமு முள்ள யாவரும் இம்முயற்சியில் ஈடுபட்டு உழைத்திருக்கின்றனர். இந்நாளில் இந்த முயற்சிக்கு ஆதரவு இன்னும் அதிகமென்பதில் ஐயமெதுவும் இல்லை. மகாத்மா காந்தியடிகள் இந்த இயக்கத்தைத் தம்முடைய ஆத்மார்த்த இயக்கமாகக் கொள்கிறார். அரசியல் கட்சிகளில் எதுவும் இதை வரவேற்கிறது. காங்கிரஸ் கட்சி தாழ்த்தப்பட்டவர்கட்கு உதவி செய்யப் பின்வாங்க வில்லை. அப்படியே ஜஸ்டிஸ் கட்சியும் பூரண ஆதரவளிக்கத் தயாராக இருக்கிறது. இன்னும் சமூக சீர்திருத்த இயக்க வாதிகள் எப்பொழுதென்று எதிர்பார்த்திருக்கின்றனர். இவை யொருபுற மிருக்க,

அரசாங்கத்தார் தாழ்த்தப்பட்டவர்களை உயர்த்துவதற்கு வேண்டிய ஏற்பாட்டைச் செய்யத் தயங்கவில்லை யென்பது பலவகையாலும் தெரிகிறது. இப்படிப்பட்ட நிலைமை யிருந்தும் அபிவிருத்தி ஆமைவேகத்தில் தான் போய்க் கொண்டிருக்கிற தென்பது கவனிக்கத்தக்க தாகும். உதாரணமாக கல்வி யபிவிருத்தி யென்பதை நோக்கலாம். தாழ்த்தப்பட்டவர்கள் பெரும்பாலும் பட்டினவாசத்திலில்லை. கிராமங்களிலும் சேரிகளில் இருக்கின்றனர். அவர்கள் இருக்கிற கிராமங்களில் தனிச் சேரிகளில் தான் வசிக்க வேண்டியிருக்கிறது. கிராமத்திலுள்ள மற்ற ஜனங்களோடு கலந்துபழக வசதி கிடையாது. கவர்ன்மெண்டு உத்திரவு எவ்வளவு கடுமையாக இருந்தாலும் ஆங்காங்கே யிருக்கிற உத்தியோகஸ்தர்களைப் பொறுத்தே இவ்விஷயம் அமுலுக்கு வரக்கூடுமென்பது யாவருமறிந்த உண்மை. உத்தியோகஸ்தர்கள் யாவரும் இவ்விஷயத்தில் தாராள மனமுடையவர்கள் என்று கூற எவருக்கும் துணிவேற்படுதற்கில்லை. பெரும்பாலும் கிராமங்கள் தோறும் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. தனிப் பள்ளிகூடங்களொருபுற மிருக்க அரசாங்க அங்கீகாரம் பெற்ற பள்ளிக்கூடங்களிலும் போர்டு பள்ளிக்கூடங்களிலும் ஜாதி வித்தியாசம் காட்டக்கூடாதென்பது கட்டாய விதி. பல பள்ளிக்கூட நிர்வாகிகள் இதற்குத் தயாராகவும் இருக்கின்றனர். பல கிராமங்களில் தாழ்த்தப்பட்ட பிள்ளைகளைப் பள்ளிக்கூடத்தில் சேர்த்தால் ஜாதி ஹிந்துப் பிள்ளைகள் வெளியேறுதல் கூடும். பள்ளிக்கூடத்துக்கே ஒழிவு ஏற்படுமென்பதும் எதிர்பார்க்கக்கூடியதுதான். பல பள்ளிக்கூடங்கள் பொதுஜன ஆதரவு பெற்றே நடப்பனவாகும். பொதுஜன ஆதரவு பொருள் விஷயத்திலானால் அது ஜாதி ஹிந்துக்களின் கையைப் பொறுத்தே யிருக்கிறதென்று சொல்ல வேண்டியதில்லை. ஜாதி ஹிந்துக்களின் பூரண ஆதரவைப் பெறாத பள்ளிக்கூடங்கள் நிலைத்து நிற்பது கஷ்டந்தான். கட்டாயப் படுத்திக் கல்வியிலாகா, உபாத்தியாயர்களையோ நிர்வாகிகளையோ நெருக்குவதன் பயனாகத் தாழ்த்தப்பட்டவர்களைச் சேர்த்துக் கொண்டு நடத்த எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் முடியாது. பள்ளிக்கூடங்கள் பெரும்பாலாக மூடப்பட வேண்டியே நேரலாம். இப்படிப்பட்ட நிலைமையில் தாழ்த்தப்பட்டவரைச் சேர்த்ததன் பயனாகச் சுருங்கி வரும் பள்ளிக்கூடங்களுக்கு 'ஸ்ட்ரெங்த்' எப்படி யிருந்தாலும் பாதகமில்லை யென்று கிராண்டை வழங்கிவிட கல்வி இலாகா தயாராக இருக்கமுடியாது. அரசனை நம்பி புருஷனை இழந்துவிட்டதாகப் பள்ளிக்கூட வாத்தியார்கள் கருதும் நிலை கட்டாயம் ஏற்படும். இந்தக் கஷ்டத்தினாலேதான் ஆதிதிராவிடப் பிள்ளைகள் பள்ளிக்கூடத்தில் அதிகமாக சேர்ந்து படிக்க முடியாதிருக்கின்றனர்.

மற்றொரு விஷயம் தாழ்த்தப்பட்டவர்கட்குப் படிப்பில் விருப்பமில்லை. மாடு மேய்ப்பதையும் ஒருநாள் முழுமையும் கஷ்டப்பட்டு இரண்டு மூன்று அயிரைக் குஞ்சு பிடிப்பதையும் விடப் படிப்பு உயர்ந்ததாக அவர்கட்குப் படவில்லை. அரசாங்கத்தாரின் நெருக்குதல் அதிகப்பட அதிகப்பட எப்படியாவது சம்பளங் கொடுத்தாவது இரண்டு தாழ்ந்தவர்களுடைய பிள்ளைகளை இழுத்துவந்து உட்காரவைக்க முயற்சிப்பார்களே யன்றி மனமாரத் தாழ்த்தப்பட்ட வகுப்புக் குழந்தைகட்குப் பலனேற்பட வகை கிடையாது.

ஒன்று அரசாங்கம் தாழ்த்தப்பட்டவர் கல்வியைக் கட்டாயமாக்க வேண்டும். அந்த வகுப்புக் குழந்தைகளைப் படிக்க வைக்கவேண்டும். இல்லாவிட்டால் பெற்றோருக்குத் தண்டனை என்ற நிலைமை ஏற்படவேண்டும். அப்பொழுதுதான் எல்லாப் பள்ளிக்கூடங்களும் ஒழுங்குக்கு வரும். இப்பொழுது போடப்படும் கடுமையான கல்வியிலாகா உத்தரவு உருப்படியாகும். அதோடு சேரிகட்குப் பக்கத்தில் பள்ளிக்கூடங்கள் இருக்கவேண்டும். அப்படிப்பட்ட பள்ளிக்கூடங்களை ஜில்லா போர்டுகளும் முனிஸிபாலிடிகளும் ஏற்படுத்த முற்படுதலும் அவசியமாகும். ஊருக்கும் சேரிக்கும் ஒரு மைல் என்றால் கல்வியில் விருப்பமில்லாத ஜனங்கள் எப்படிப் படிக்க வருவார்களென்று எதிர்பார்க்க முடியும்? முடியாத காரியத்தைச் செய்ய முயன்றால் அதிலிருந்து பொய்யும் புரட்டுமே முளைப்பது இயல்பு. அரசாங்கத்தார் உண்மையில் தாழ்த்தப்பட்டவரின் கல்வியறிவைப் பெருக்க இஷ்டப்பட்டால் கட்டாயப் படிப்பு முறையை அமுலுக்குக் கொண்டுவர வேண்டும். அதற்கு ஒத்துழைக்காத பள்ளிக்கூடங்களை ரத்து செய்தல் வேண்டும். இதுவே நேர்மையாக இருக்குமன்றி வெறுமே உத்தரவுகள் விடுவதில் ஒரு பயனும் ஏற்படுவதற்கில்லை.

---

## திரு. வீ. வே. குப்பான் செட்டியார் பிரயாணம்

17—6—41 இரவு 7-30 மணிக்கு செட்டியார் சகுடும்பத்துடன் சங்கத் தலைவர் ஸ்ரீ வீ.வே. குப்பான் செட்டியார் பினாங்குக்குப் புறப்பட்டார்கள். அவர்களை வழியனுப்ப பெரும்பான்மையான அங்கத்தினர்களும் ஏனைய பல நண்பர்களும் விஜயம் செய்திருந்தார்கள். சங்கத்தின் சார்பாக அன்னாருக்கு மலர்மாலை ஒன்று காரியதரிசி ஸ்ரீ அழு. ஆரு. பழநியப்ப செட்டியாரால் அணிவிக்கப்பட்டது.

---

## பீஹாரில் 723 சத்யாக்ரகிகள்

பாட்னா, ஜூன், 17—

723 பேர்கள் கொண்ட நான்காவது சத்தியாக்கிரகிகள் ஜாப்தா மகாத்மாவின் அங்கீகாரத்திற்காக பீஹார் மாகாண காங்கிரஸ் கமிட்டியால் அனுப்பப்பட்டிருக்கிறது. இவர்கள் ஜூலை முதல் சத்யாக்கிரகம் செய்வார்கள்.

## தேரழுந்தூரில் கம்பர் விழா

### திரு. சொ. முருகப்பா தலைமை

கம்பர் பிறந்த ஊரான தேரழுந்தூரில் கம்பர் விழா ஜூன் 11உ மிக விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. காரைக்குடி சொ. முருகப்பா அவர்கள் தலைமை வகித்தார்கள். நன்கு அலங்கரிக்கப் பெற்றிருந்த வசந்த மண்டபத்தில் கூட்டம் நடைபெற்றது. பொன்மலை ஸ்ரீமதி பாலாம்மாள் அவர்கள் இன்னிசையுடன் கடவுள் வாழ்த்துப்பாடி சபையோரை மகிழ்வித்தனர். திரு. டி. கே. சிதம்பரநாத முதலியாரவர்கள் வரவேற்பு உபந்யாசம் ஒன்று நிகழ்த்தினார்கள். தலைவர் முகவுரையுடன் முற்பகல் நிகழ்ச்சி முடிவு பெற்றது. மாலை 4-30-க்கு மறுபடியும் கூட்டம் கூடியது. பொன்மலை ஸ்ரீமதி பாலாம்மாளவர்கள் கடவுள் வாழ்த்துப் பாடினார்கள். சபையோர் விருப்பப்படி ஸ்ரீமான் சிதம்பரநாத முதலியாரவர்கள் பரதன் ராமனைச் சந்திக்கும் இடத்தில் தொடர்ந்து சில பாடல்களை யெடுத்து விளக்கி சுமார் ஒரு மணி நேரம் சிறந்ததொரு உபந்யாசம் புரிந்தார்கள். சிதம்பரம் டிப்டி கலெக்டர் ஸ்ரீ ரங்காச்சாரியாரவர்களும், ஸ்ரீ சுவாமி ஐயாவர்களும் கம்பராமாயணச் செய்யுள்களை யெடுத்துக் காட்டி கம்ப ராமாயணச் சிறப்பைப்பற்றி உபந்யசித்தார்கள். இவ் விழாவை வெளியூரிலிருக்கும் அன்பர்களும் உள்ளூரிலுள்ள கனவான்களும் பொது ஜனங்களும் விமரிசையாகக் கொண்டாடினார்கள். மருத்தூர் மிராசுதார் திரு. ஆர். எஸ். கந்தசாமி அவர்கள் விழாவில் காட்டிய ஆர்வமும் உபசாரமும் மிகவும் போற்றத் தக்கனவாகும்.

---

## ஸிரியா யுத்தம்

பிரிட்டிஷ் படைகள் ஸூடானை வசப்படுத்திக்கொண்டுவிட்டதாக விச்சி அறிக்கை கூறுகிறதென்று ஜர்மன் நியூஸ் ஏஜன்ஸி அறிக்கை கூறுகிறது. இத் துறைமுகம் லெபனானில் பெய்ரட்டிற்குத் தெற்கே 25 மைல் தூரத்திலிருக்கிறது. டமாஸ்கஸ்ஸிலிருந்து 10 மைல் தூரத்திலுள்ள ஈவ்தா என்ற இடத்தை நேசதேசப் படைகள் வசப்படுத்திக்கொண்டதாக ராணுவ தலைமைக் காரியாலய அதிகாரி கூறுகிறார். பிரஞ்சு தளகர்த்தரான ஜெனரல் டெல் ஹோமி விரியாவி லிருந்து இஸ்தம்புல்லுக்கு வரும் வழியில் அங்கரா வந்திருக்கிறார். சுயேச்சைபிரஞ்சுப்படைத்தலைவரான ஜெனரல் லாஹெண்டில் ஹோமி காயம் பட்டார் என்ற செய்தி ஊர்ஜிதமாகியிருக்கிறது. ஜெனரல் டிகால் காயப்பட்டதாக வந்த செய்தி தவறு என்று அறிவிக்கப்படுகிறது. ஸிரியாப் போராட்டம் சமாதானமான வழியில் சமரஸமாக முடியுமென்று இன்னும் நம்பப்படுவதாக ராணுவ அதிகாரிகள் கூறுகின்றனர். அபிஸீனியாவிலுள்ள பாக்கி இத்தாலியரைத் துரத்தும் வேலை, மழையால் சற்று தடைப்பட்ட போதிலும், திருப்திகரமாக நடைபெற்று வருகிறது. சில தினங்களில் பெய்ரட் சரண்புகலா மென எதிர்பார்க்கப்படுகிறது. பிரஞ்சுக்காரரும் செனிசலீஸ் படையினரும் தான் நேச தேசத்தினரை எதிர்த்துவருகின்றனர். மொராக்கோ வாசிகளாகவும் ஷியாக்களாகவும் முள்ளவர்கள் பிரஞ்சு சுயேச்சைக் கட்சியில் சேருவதற்கான அறிகுறிகள் காணப்படுகின்றன. பந்தோபஸ்து முகாமிலிருந்து விடுவிக்கப்பட்ட ஜெர்மானியரையும் இத்தாலியரையும் பலப்படுத்துவதற்காகப் புகுந்த 200 முதல் 300 ஜெர்மானியர் வரை அலெப்போவுக்கு ஓடிவிட்டார்கள். ஸிரியாவில் பிரிட்டிஷ் விமானப் படையின் கையே ஓங்கி நிற்கிறது. நேசதேச முன்னேற்றத்திற்கு குதிரைப் படை வெகுவாக உதவியது. ஜெர்மன் வெடி குண்டெறியும் விமானங்களை பிரிட்டிஷ் யுத்த விமானங்கள் எதிர்த்து பல நாஸி யுத்த விமானங்களையும் ஒரு வெடி குண்டெறியும் விமானத்தையும் தாக்கின. ரயாக்கிற் கருகிலுள்ள விரோதி விமானங்களை பிரிட்டிஷ் விமானங்கள் தாக்கி சேதப்படுத்தின. பெய்ரெட்டிற் கருகில் ஒரு விரோதிக் கப்பலை பிரிட்டிஷ் கடற்படை விமானம் டார்பிடோ செய்தது.

டமாஸ்கஸுக்கு வெளியே யுள்ள நேசதேசப் படைகள் மிக்க பலமுள்ளவையாக இருக்கின்றன.

## போலீஸ் ஆபீசராக நடித்த கைதி

பால்க்காட்டைச் சேர்ந்த மாணூர் கிராமத்தில் உள்ள மாதவன் நாயர் என்ற கைதி பாலக்காட்டு சர்க்கார் ஆஸ்பத்திரியிலிருந்து தப்பி ஓடிவிட்டான்.

தப்பி வெளி வந்த கைதி தன்னை ஒரு ஸி. ஐ. டி. ஆபீசர் என்று சொல்லிக்கொண்டு கோயம்புத்தூருக்கு வந்து ஒரு நாவிதனிடம் தான் ஒரு கேசு சம்பந்தமாக ஒரு நபரைப் பிடிக்க வந்ததாகவும் சொல்லி குறிப்பிட்ட நபரின் போட்டோ படத்தைக் காட்டி ஆஸ்பத்திரியிலிருந்து தான் தப்பி வரும் சமயம் தன்னுடன் கொண்டு வந்திருந்த கைவிலங்குகளையும் காட்டினான். சில மணி நேரத்தில் திருப்பித் தந்துவிடுவதாக உறுதி சொல்லி அந்த நாவிதனுடைய கெடிகாரத்தை எடுத்துக் கொண்டு விலங்குகளை அவனிடம் கொடுத்து விட்டுச் சென்று விட்டான். பின்னர் ஸி. ஐ. டி. கான்ஸ்டபிள் என்று நடித்துக் கொண்டு ஒரு ஆசாரியிடம் போய் அந்த ஊரில் (கோயம்புத்தூர்) ஒரு ஹெட்கன்ஸ்டபிள் வீட்டில் நடக்கும் கல்யாணத்தில் மணப் பெண்ணுக்கு வெகுமதியளிக்க இரண்டு தங்க மோதிரங்கள் வேண்டுமென்று சொல்லி மோதிரங்களைப் பெற்றுக் கொண்டு பணம் பிறகு தருவதாகச் சொல்லிப் போய் விட்டான். இதை யறிந்த கோயம்புத்தூர் போலீசார் அவனைப் பிடித்து போலீஸ் பாதுகாப்பில் வைத்திருக்கிறார்கள். பாலக்காடு டவுன் போலீசார் போலீஸ் பாதுகாப்பிலிருந்து தப்பியதற்காக அவன்மேல் வழக்குத் தொடர்ந்திருக்கிறார்கள்.

---

## ஸெர்வெண்ட்ஸ் ஆப் இந்தியா சொஸைட்டி

காலஞ்சென்ற திரு கோபால கிருஷ்ண கோகலேயினால் 1905ல் நிறுவப்பட்ட இச் சொஸைடியின் 1940-41-வது ஆண்டு அறிக்கை கிடைக்கப் பெற்றோம். சாதிமத பேதமின்றி இந்திய தேசிய முன்னேற்றமொன்றே நோக்கமாகக் கொண்டு உழைப்பதற்கு ஊக்கமிக்க ஊழியர்களைத் தயாரிப்பதற் கென்றே, இச் சொஸைடி நிறுவப்பட்டது. 12—6—41உ யன்று இச் சொஸைடியின் 36 ஆண்டுகள் முடிவுற்றன.

பிரஸ்தாப அறிக்கை வருடத்தில் யுத்த நிகழ்ச்சி காரணமாகவும், விலைவாசி உயர்வின் காரணமாகவும் சொஸைடிக்கு ஏற்பட்ட செலவு அதிகத்தின் காரணமாகவும் ஒரு புறம் நன்கொடைகள் மூலம் வருவாய் குறைந்து, இன்னொரு புறம் அச்சாபீஸ், பத்திரிகை இவற்றின் மூலம் லாபம் குன்றியதாலும், சொஸைட்டிக்குப் பெருத்த பொருளாதாரச் சங்கட மேற்பட்டது. எனினும் கூடியவரை பொதுவேலைக்குப் பாதக மின்றியில் சிக்கனத்தைக் கையாண்டும் நண்பர்களின் ஒத்தாசையைக் கொண்டும் ஒருவாறு இந்நிலைமை சமாளிக்கப்பட்டது.

1940-ல் யுத்த நிகழ்ச்சி சம்பந்தமாய் இச்சொஸைடி தனது நோக்கத்தை ஒரு ஸ்டேட்மெண்டு மூலம் வெளிப்படுத்தியது, ஹிட்லரின் முறைகளை பலமாக எதிர்ப்பதுடன், இந்திய மக்களுக்கு ஒரு வித மனமாற்றத்தையும் நம்பிக்கையையும் உண்டுபண்ணக்கூடியவாறு, இந்திய கவர்ன்மெண்டார் தங்கள் ஆதிக்கத்தை ஜனங்களுக்கு விட்டுக்கொடுக்க முன்வராததையும், உள்நாட்டு வித்தியாசங்களையும் குழப்பங்களையும் வளர்ப்பதில் அவர்கள் காட்டும் ஆசையையும் வெகுவாக இச்சொஸைடி கண்டித்திருக்கிறது. இந்திய பாதுகாப்புக் கேற்ற நடவடிக்கைகளை இந்தியரே செய்துகொள்ளப் போதுமான எல்லா வசதிகளும் உடனே அளிக்கப்படவேண்டுமென்றும் பாதுகாப்பு சம்பந்தமான ராணுவப் பயிற்சியும் தொழில் ஸ்தாபனமும் உடனே ஆரம்பிக்க வேண்டுமென்பதை இச் சொஸைடி வற்புறுத்தியிருக்கிறது.

---

நாஜி பேசுவதற்காக ராணுவ உடையில் வரும் எந்த நபரையும் அல்லது கோஷ்டியையும் சுடவேண்டு மென்றும், அவர்களை உயிருடன் பிடிக்க முயற்சி செய்ய வேண்டுமென்றும் விச்சி துருப்புகளுக்கு உத்தரவிடப்பட்டிருக்கிறது.



## காமன்ஸ் சபையில்

### மிஸ்டர் சர்ச்சில் பிரசங்கம்

கிரீட் தோல்விபற்றி காமன்ஸ் சபையில் ஜூன் 10உ யில் நடந்த விவாதத்துக்கு பதிலளிக்கையில் மிஸ்டர் சர்ச்சில் பின்வருமாறு குறிப்பிட்டார்:—

கிரீட் யுத்தம் பெரிய போர் நடவடிக்கையில் ஒரு அம்சமே யாகும். சர்வாதிகாரிகளது நாடுகளில் தோல்விகளுக்குச் சமாதானம் கூறும்படி கேட்பதில்லை. எதிரிகளுக்கு உபயோகப்படக் கூடிய தகவலைத் தெரிவிக்காமல் முழு சமாதானம் கூற முடியாது. வேறு பல இடங்களையும் பாதுகாக்க வேண்டியிருந்ததினாலும் போக்குவரத்துக் கஷ்டத்தினாலும் கிரீட்டில் வைத்திருந்ததை விட அதிகமான விமான எதிர்ப்பு பீரங்கிகளும் விமானங்களுமிருக்கும்படி நம்மால் செய்ய முடியவில்லை. குறைகளை அறிந்த போதிலும் எதிர்க்காமல் கிரீட் எதிரிவசமாக விடக் கூடாதென்று முடிவு செய்தோம். ஜெனரல் வேவல் முதலியவர்களும் வெற்றி கிடைக்கலாமென நம்பினர். இந்த முடிவு பொறுப்பை நான் பூரணமாக ஏற்கிறேன். இல்லாவிட்டால் இதற்குள் இராக்கும் ஸிரியாவும் ஜெர்மன் வசமாகியிருக்கும். தற்போது பிரிட்டனில் விமானப்படைப் பாதுகாப்பு ஏற்பாடுகளில் அபிவிருத்திகள் செய்யப்பட்டிருக்கின்றன. 6 மாதங்களுக்குப் பிறகு நிலைமை கேவலமடையா திருந்தால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியப் படைகளது சரிதத்தில் கீர்த்தி ஓங்கிநிற்கும்.

---

## நாஸி ஸ்தாபனங்களை மூட உத்திரவு

யுனைடெட் ஸ்டேட்ஸிலுள்ள எல்லா ஜர்மன் ஸ்தானீகர் காரியாலயங்களும் மூடப்படவேண்டும். அவற்றிலுள்ள ஜர்மனிய ரெல்லாரையும் அப்புறப்படுத்த வேண்டும். ஜர்மன் தகவல்களைக் கொடுக்கும் லைபிரெரியும் ரயில்வே தகவலறிவிப்பு ஸ்தாபனங்களும் சுற்றுப்பிரயாணம் செய்வோருக்கு தகவல் கொடுக்கும் ஸ்தாபனங்களும் ஜர்மன் டிரான்ஸ்மிஷன் நியூஸ் ஏஜன்ஸியும் மூடப்படவேண்டும். ஜெர்மன் ரேடியோக்களும் பறிமுதல் செய்யப்படுமென்று அமெரிக்க சர்க்கார் நாஸி ஸ்தாபனங்கள் மீது உத்திரவிட்டிருக்கிறது. ஜூலை 10உக்குள் இந்த ஸ்தாபனங்களை மூடி ஆட்களை வாபீஸ் பெறும் வேலையைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்று உத்தேசிக்கப்பட்டிருக்கிறது.

---

## சென்னை புதிய மேயர் ஜூன் 30ல் தேர்தல்

காலஞ்சென்ற சென்னை மேயர் ஸ்ரீ பாசுதேவுக்கு பதிலாக புதிய மேயர் தேர்ந்தெடுக்க ஜூன் 30உ திங்கட்கிழமை மாலை 5-15 மணிக்கு கார்ப்பரேஷன் கூட்டம் நடைபெறும். வகுப்பு மாற்ற முறைப்படி இந்தத் தடவை பிராமணரல்லாத ஹிந்து ஒருவர் மேயர் பதவிக்குவர உரிமையுண்டு.

---

## சிவகங்கை ராஜா காலமானார்

சிவகங்கை ராஜா ஸ்ரீமத் ரகுநாத துரைசிங்கம் அவர்கள் மாரடைப்பினால் ஜூன் 16உ யன்று காலமானார். காலஞ்சென்ற ராஜா அவர்களுக்கு வயது 53 ஆகிறது. ஸ்போர்ட்ஸில் அவருக்கு பிரேமை அதிகம். எல்லா ஜனங்களுடைய நன்மதிப்பையும் பெற்றவர். இண்டியில் குதிரைப் பந்தயத்தை பிராபல்யப்படுத்த ரொம்ப உதவி செய்தார். "சிவகங்கைசப்" பையும் ஏற்படுத்தினர். தனது ஜமீனில் கல்வியைப் பரப்ப அதிக சிரத்தை எடுத்துக்கொண்டார்.

ராஜா சாகிப் அவர்கள் யுத்த முயற்சியில் மிகுந்த கவனம் செலுத்தினர். யுத்த நிதிக்கு ரூ. 21,000க்கு மேல் கொடுத்திருக்கிறார். காலஞ்சென்ற ராஜாவுக்கு இரண்டு குமாரர்களும், இரண்டு குமாரத்திகளும் இருக்கிறார்கள். சிவகங்கை நகர முழுதும் அன்று ஹர்த்தால் அனுஷ்டித்தது. பல பிரமுகர்கள் தங்களது வருத்தத்தை அர்ண்மனைக்கு வந்து தெரிவித்துக்கொண்டார்கள். சென்னை சர்க்காரிடமிருந்து உத்திரவு வரும் வரை சமஸ்தான நிர்வாகத்தை ராமனதபுரம் கலெக்டர் ஏற்றுக்கொண் டிருப்பதாகத் தெரிகிறது.

## குமாரராஜா ஸர் முத்தையா செட்டியார்

மன்னர் பிறந்த நாளன்று 'ஸர்' பட்டம் அளிக்கப் பெற்றிருக்கிறார்.

## பிறந்தநாள் பட்டங்கள்

கானாடுகாத்தான் ஸ்ரீ வி. வி. வி. டி. வி. வெங்கடாசலம் செட்டியாரவர்களுக்கு மன்னர் பிறந்த நாளன்று "ராவ்பகதூர்" பட்டம் அளிக்கப்பெற்றிருக்கிறது.

காரைக்குடி பாங்கரும் வியாபாரியுமான ஸ்ரீ. எஸ். ஆர். எம். எஸ். ஆர். செட்டியார் அவர்களுக்கு மன்னர் பிறந்த நாளன்று 'ராவ்பகதூர்' பட்டம் வழங்கப்பெற்றிருக்கிறது.

---

## திருப்பத்தூர்

### விவசாயிகள்-தொழிலாளிகள் கூட்டம்

8-6-41 மாலை, 4-30 மணிக்கு சுமார் 30 முப்பது கிராமங்களில் உள்ள விவசாயிகளும் தொழிலாளிகளும் கலப்பை மண்வெட்டி முதலிய ஆயுதங்களுடனும் தேசியக் கொடிகளுடனும் திருப்பத்தூர் காங்கிரஸ் மாளிகையிலிருந்து பெரிய கடை வீதி, தேரோடும் வீதி இவைகளைச் சுற்றிவந்து தேர் முட்டிக்கருகில் சுப. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் பிள்ளையார்பட்டி மு. முத்தழகு, சிறுகூடல்பட்டி குப்பான், தென்மாப்பட்டு தே. மாணிக்கம், தென்மாப்பட்டு தொண்டர் மாணிக்கம், திருப்பத்தூர் கே. பைரவரெத்தினம் இவ்வைவரும் விவசாயிகள் தொழிலாளிகள் குறைகளைப் பற்றி விரிவாகப் பேசினார்கள். சில தீர்மானங்கள் செய்யப்பட்டன.

---

## பார்லிமெண்ட் மெம்பரைக் காணோம்

### கொல்லப்பட்டிருக்கலாமெனக் கருதப்படுகிறது

பார்லிமெண்டில் டப்ளின் தொகுதிப் பிரதிநிதியாக இருந்து வரும் மிஸ்டர் டப்ஸி ஜாக் பி. ஜேயல் (கன்சர்வேடிவ்) காணப்படவில்லை என்று அறிவிக்கப்படுகிறது. அவர் கொல்லப்பட்டுப் போயிருக்கலாமென ஊகிக்கப்படுகிறது. இவர் கடற்படை ரிசர்வ் தொண்டர்களுள் ஒருவராக இருந்தார். தென்னாப்பிரிக்காவிலுள்ள பிரக்யாதிபெற்ற சுரங்கச் சொந்தக்காரரான காலஞ்சென்ற எஸ். பி. ஜோயலின் கடைசிக் குமாரராவார்.

## இந்தியக் கோடியில் விளக்கணைப்பு ஏற்பாடு

இந்தியாவின் கோடியிலுள்ள இடங்களில் அதாவது கடலை நோக்கினாற்போலுள்ள குமரிமுனை, திருவனந்தபுரம் முதலிய பிரதேசங்களில் விளக்கணைப்பு ஏற்பாடுகள் உடனே அமுலுக்கு வரும். மேற்படி இடங்களில் கடலையோ அல்லது வானையோ நோக்கினாற்போலிருக்கும் எல்லா விளக்குகளின் வெளிச்சத்தையும் மறைக்கும்படி திருவாங்கூர் சர்க்கார் உத்திரவிட்டிருக்கிறார்கள்.

---

## சத்யாக்ரஹி சா. கணேசன்

28-5-41 குராக்குடி, கானாப்பூர், சதுர்வேதமங்கலம் ஆகிய இடங்களிலும்; 29-5-41 மணப்பட்டி, சிங்கம்புணரி ஆகிய இடங்களிலும்; 30-5-41 வேங்கைப்பட்டி, பிரான்மலை, மேலப்பட்டி, புதூர் ஆகிய இடங்களிலும்; 31-5-41 பன்னபட்டி, நாகமங்கலம், ஒற்றைக்கடை, புழுதிபட்டி, அதிகாரம், மோடனிமலை, துவரங்குறிச்சி, துலுக்கன்பட்டி, காரைப்பட்டி, கொண்டயன்பட்டி, கள்ளக்காம்பட்டி, கருமலை, புத்தானத்தம் ஆகிய இடங்களிலும்; 1-6-41 மணப்பாறையிலும்; 3-6-41 பொத்தமேட்டுப்பட்டி, முத்தப்புடையான்பட்டி, மறவனூர், அம்மாப்பேட்டை, சத்திராப்பட்டி, முத்துக்குளம், ராம்ஜிநகர், கருமண்டபம் ஆகிய இடங்களிலும் கோஷம், கடைப் பிரசங்கம், பொதுக்கூட்டப் பிரசங்கம் ஆகியன செய்துவிட்டுத் திருச்சி வந்திருக்கிறார். அங்கு அவரிடம் டெல்லி நோக்கிச் செல்லவேண்டாம் என்றும், சென்னை நோக்கியே செல்லவேண்டும் என்றும் வந்த காங்கிரஸ் சர்க்குலர் விஷயம் காரைக்குடி நகர சத்யாக்ரகக் கமிட்டி சர்வாதிகாரியால் அறிவிக்கப்பட்டது. எனவே திட்டத்தை மாற்றி நேரே சென்னை செல்வதாக முடிவு செய்து 11-6-41 காலை 5-மணிக்குத் திருச்சியை விட்டுப் புறப்படுகிறார். இதுவரை 325 மைல்கள் நடந்திருக்கிறார்.

---

## கண்டரமாணிக்கம் சத்தியாக்கிரகிகள்

### (ஒரு நிருபர்)

நாச்சியாபுரம், ஜூன், 15—

டில்லி நோக்கி சென்றுகொண் டிருக்கும் கண்டரமாணிக்கம் சத்தியாக்கிரகிகளான ஸ்ரீமான் ராம. கா. லெட்சுமணன் செட்டியார், ஸ்ரீ வயி. கி. கிருஷ்ணன் இருவரும் யுத்த எதிர்ப்புப் பிரசாரம் செய்துகொண்டு இன்று காலை இங்கு வந்துசேர்ந்தார்கள்.

---

## தபால் கப்பல் மூழ்கியது

இங்கிலாந்துக்கும் அயர்லாந்துக்கும் இடையே செல்லும் தபால் கப்பல் "லெண்ட் பாட்ரிக்" எதிரி விமானங்களால் மூழ்கடிக்கப்பட்டது. 23 பேர் உயிரிழந்தனர். கப்பல் தாக்கப்பட்டபோது பிரயாணிகள் தூங்கிக்கொண்டிருந்தனர்.

---

## மலையாளச் சேதம்

சமீபத்தில் மலையாளத்தில் ஏற்பட்ட வெள்ளத்தினால் உண்டான சேத விபரங்களைப்பற்றி மலையாளம் கலெக்டர் திரு. வில்யம்ஸ் ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார். மொத்தம் உயிர்ச்சேதம் 104 மேமீ 26உயில் புயற்காற்றினால் உயிரிழந்தவர்கள் 65. 8000 க்கு அதிகமான வீடுகள் சேதமடைந்திருக்கின்றன. சேதமான பிரதேசங்களில் கஷ்ட நிவாரண மளிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறது. கஷ்ட நிவாரண வேலைகளுக்காக சென்னை சர்க்கார் ரூ. 15000 அளித்திருக்கிறது.



## மார்க்கெட் செய்தி

### லண்டன் ரப்பர்

லண்டன், ஜூன் 16உ

ராத்தல் 1-க்கு பதின் மூன்றரையே அரைக்கால் பென்ஸ்

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், ஜூன் 14உ

ரப்பர் பீக்கல் ஒன்றுக்கு 52 வெள்ளி 50 காசு

### கொழும்பு ரப்பர்

கொழும்பு, ஜூன் 14உ

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 58 சதம் |
| ஷீட் ,, | 57 ,, |
| ரப்பர் கூப்பன் | 12½ ,, |
| டீ கூப்பன் | 67 ,, |

### கொப்பரா

முதல் தரம் ரூ. 26-50

### சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூன் 17உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 28 | 9 | 6 |
| சவரன் (சில்லறையில்) | 28 | 10 | 0 |
| முசை தோலா 1க்கு | 41 | 11 | 0 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 68 | 10 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 10 | 6 |

---

## சர் ஷண்முகம் அமெரிக்கா செல்வார்

கொச்சி மாஜி திவான் ஸர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் அமெரிக்காவில் யுத்த தளவாட சாமான்கள் வாங்க ஏற்படுத்தப்பட்டிருக்கும் கமிட்டித் தலைவராக நியமிக்கப் பட்டிருப்பதாகத் தெரிகிறது. இந்தியா சட்டசபைத் தலைவரின் சம்பளம் பெறுவார். ஜூலை கடைசிக்குள் நியூயார்க் போய்ச் சேரலாமென எதிர்பார்க்கப்படுகிறது. தற்காலிகமாக நியூயார்க்கிலிருக்கும் இந்திய வியாபாரக் கமிஷனர் அவருக்கு உதவிபுரிவார். இது சம்பந்தமான சர்க்கார் அறிக்கை நன்று இந்தவாரத்தில் வெளியிடப்படும்.

---

## சூதாடியதாக 11 பேர் கைது

சிவகங்கை உதவி ஜில்லா போலீஸ் சூப்ரெண்டு ஸ்ரீ அப்பண்ணராஜாவும் போலீஸ் இன்ஸ்பெக்டர் கோவிந்த குட்டி நாயரும் சில போலீஸ் ஜவான்களுடன் ஜூன் 12உ வியாழக்கிழமை நடு இரவில் பள்ளத்தூரில் ஒரு வீட்டில் முற்றுகையிட்டு பார்த்து சிவக்கொழுந்தன் செட்டியாரையும் மற்ற 10 பேரையும் சூதாடியதாக கைது செய்தார்கள். ரொக்கம் ரூ. 1000 மும் மற்ற சாமான்களும் கைப்பற்றப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. அவர்கள் 11 பேரும் திருப்பத்தூர் அடிஷனல் சப்மாஜிஸ்ட்ரேட் முன்பாக ஆஜர் செய்யப்பெற்று ஜாமீனில் விடப்பட்டிருக்கிறார்கள்.

---

## காரைக்குடி பஞ்சாயத்துக் கோர்ட்

1941-ஆ C. S. No. 70.

R. M. N. S.

சோமசுந்தரம் பிள்ளை — வாதி

இ. பழனியப்ப ஆசாரி — பிரதிவாதி

பிரதிவாதிக்கு அறிவிப்பு—

வாதி உம்முடைய பேரில் ரூ 23-15-0க்கு பிராது செய்திருப்பதற்கு உமக்குப் பல சமன்கள் அனுப்பியும் சார்வாகாமலிருப்பதால் அதை விசாரித்து முடிவு செய்ய 26—6—41உ வாயிதா ஏற்பட்டிருக்கிறது. அன்று ஆஜராகி தாவாவைத் தெரியப்படுத்திக் கொள்ளாத பக்ஷத்தில் உம்மை அல்லாமலே 26—6—41உ விசாரணை செய்து ஒருதலைபக்ஷமாக முடிவு செய்யப்படும்.

PN. M. M. PL.
Venkatachalam Chettiar,
18—6—41. பிரஸிடெண்டு.

# காரைக்குடி நகர சபை

## வக்கிலிடம் நம்பிக்கையில்லை

(நமது நிருபர்)

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டம் ஒன்று 14-6-41 சனிக்கிழமை மாலை 5-மணிக்கு காந்தி மாளிகையில் சேர்மென் ஸ்ரீ ராய. சொக்கலிங்கம் தலைமையில் கூடியது. தலைவருள்பட பதின்மூன்று அங்கத்தினர்கள் ஆஜராகி இருந்தார்கள். கீழ்க்கண்ட சில முக்கிய விஷயங்கள் ஆலோசனைக்கு வந்து முடிவு செய்யப்பெற்றன.

தொடர்ந்தாற்போல் மூன்று கூட்டங்கட்கு வாராத அபிஸீனியா பழ. நாச்சியப்பன் அவர்களை ரெஸ்டோர் செய்யப்பெற்றது.

### வக்கீல் நடத்தை கண்டனம்

முனிஸிபல் சூட்டு டிக்கிரிகளின் மேல் வசூலிக்கப்பட்ட தொகையை பல மாதங்கட்கு பிறகு முனிஸிபல் கணக்கில் வரவு வைக்கப்பட்டிருக்கிறதென்றும் டி தொகைகள் வசூலிக்கப்பட்டவுடன் கமிஷனருக்கு தெரிவிக்காமலும் வசூல் பணத்தை உடனே அனுப்பாமல் நீண்டகாலம் தன் கைவசம் வைத்துக்கொண்டிருந்தது வக்கீல் தொழில் முறைக்கு விரோதமானதென்றும் ஏற்கனவே அவரிடம் பெருந்தொகைகள் அட்வான்சாக இருந்தும் வசூலான டிக்கிரி தொகைகளையும் உடனுக்குடனே அனுப்பாமல் தற்காலிகமாக தான் உபயோகித்துக்கொண்ட வக்கீல் ஆர். சோமசுந்திரமய்யர் அவர்களுடைய செய்கையை பலமாகக் கண்டிக்கிறது என்ற தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

### கல்லுக்கட்டி ஊருணி தாவா

கல்லுக்கட்டி ஊருணி தாவா சம்பந்தமாக (O. S. 198/39) ரிக்கார்டுகள் படிக்கப்பட்டன. ஜில்லா கலெக்டர் முன்னிலையில் 17-5-41ல் நடத்திய சமரசப் பேச்சில் கலெக்டருக்கு திருப்தியான முறையில் ராஜிக்கு இணங்க கவுன்சில் ஒப்புக்கொண்டும் அம்மன் கோவில் டிரஸ்டி வகையறா பேர்கள் ஒத்துவராததால் சமரசப் பேச்சு முடிவு பெறவில்லை. கேசை துரிதமாக நடத்தவேண்டுமென்று தீர்மானிக்கப்பெற்றது.

### வக்கிலிடம் நம்பிக்கை இல்லை

கல்லுக்கட்டி ஊருணி நீர் பிடிப்பு தாவாக்களில் தன் பீசு சம்பந்தமாய் சென்னை லோகல் அட்மினிஸ்ட்ரேஷன் டிபார்ட்மெண்டு செக்ரிட்டரிக்கு அனுப்பிய மிமோராண்டத்தின் நகல் ஒன்றை அனுப்பி வந்துள்ள தேவகோட்டை வக்கீல் ஆர். சோமசுந்தரமய்யரின் லெட்டர் ஆலோசனைக்கு வந்தது.

வக்கீல் திரு. சோமசுந்தரமய்யர் கவர்ன்மெண்டுக்கு எழுதிய கடிதம் படிக்கப்பட்டது. அதில் உண்மைக்கு விரோதமாகவும் கவுன்சிலைப்பற்றி தவறான மனப்பான்மையுடனும் பல விஷயங்கள் காணப்படுவதாலும் இனி முனிஸிபல் கேஸ்களை அவர் சரிவர நடத்துவார் என்ற நம்பிக்கை இக் கவுன்ஸிலுக்கு இல்லாததாலும் அவரிடமிருக்கும் முனிஸிபல் சம்பந்தமான எல்லா கேஸ்களையும் அவைகள் எந்த நிலைமையிலிருந்தாலும் உடனே ரிக்கார்டுகள் எல்லாவற்றையும் வாங்கி வக்காலத்துகளை ரத்துச் செய்ய வேண்டுமென்றும் டி வக்கீல் ஆர். சோமசுந்திரமய்யருக்கு கல்லுக்கட்டி ஊருணிக் கால்வாய் கேஸ் ஒன்பதும் ஒரே தன்மை கொண்டதாதலாலும் சர்வே சம்மந்தமான தாதலாலும் இன்னும் டி கேசுகள் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை யாதலாலும் இதுவரை அவர் பார்த்த வேலைகளுக்கு டி கேஸ்கள் ஒன்பதுக்கும் பீஸ் ரூ 450 கொடுப்ப தென்று தீர்மானிக்கப் பெற்றது.

### வாடகை வேண்டும்

காலை 6 மணி முதல் மாலை 6 மணிவரை முசாபரி பங்களாக்களில் தங்கும் யுத்தத்திற்கு ஆட்கள் தேர்ந்தெடுக்கும் ஆபீசர்களை வாடகை இல்லாமல் அனுமதிக்கும்படி முனிஸிபல் கவுன்ஸில்களையும் ஜில்லா போர்டுகளையும் கோரி வரலான கவர்மெண்டு உத்திரவு யோசிக்கப்பட்டு வாடகை இல்லாமல் அனுமதிக்க முடியாது என்று தீர்மானிக்கப் பெற்றது.

பிறகு பல மாமூலான விஷயங்கள் முடிவுசெய்யப் பெற்று இரவு 7 மணிக்கு கூட்டம் முடிவுற்றது.

## செட்டியார் நல உரிமைச் சங்கம்

11-6-41 மாலை 6-வது ஆண்டு 10வது நிர்வாக சபைக் கூட்டம் உபதலைவர் ஸ்ரீ பி. வெ. குப்பான் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீ எஸ். ஸ்ரீநிவாசய்யங்கார் மரணம் குறித்தும் அங்கத்தினர் அபிசினியா ஸ்ரீ பழ. நாச்சியப்பா அவர்களின் தந்தையார் மரணம் குறித்தும் அனுதாபத் தீர்மானங்கள் செய்வித்தும் கால் நடை சத்தியாக்கிரகி ஸ்ரீ சா. கணேசன் நகரசபையின் உபதலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதைப் பாராட்டியும் சங்க ஆறுவது ஆண்டு விழாவை ஆவணி மாதம் முதலாவது வாரத்தில் நடத்துவதென்றும் அதற்குத் தலைமைவகித்து நடத்தித்தர முறையே ஸ்ரீ திரு. வி. கல்யாணசுந்தர முதலியார், ஸ்ரீ டி. எஸ். அவிநாசிலிங்கம் செட்டியார், எம். எல். ஏ. ஸ்ரீ டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்களை கேட்டுக் கொள்கிறது யென்றும் தீர்மானிக்கப் பெற்று கூட்டம் இனிது நிறைவேறியது.

மாதம் 500 விமானங்கள் உற்பத்தி செய்யும் திட்டத்திற்காக அதிக தொழிற்சாலைகளைக் கட்ட 100 கோடி டாலர் செலவிட அமெரிக்க சர்க்கார் தீர்மானித்திருக்கிறது.











## அவளுடைய ஊழற்சதை கரைவதைக் கவனித்தாள்.

நான்கு மாத காலத்தில் 2 ஸ்டோன் எடைக்குமேலாகவே குறைந்துவிட்டது

இம்மாது 5 அடி உயரம் தானிருக்கிருள். ஆனல் அவளுடைய எடையோ 11 ஸ்டோன் 4 பவுண்டாக யிருந்தது. தன் ஊழற்சதையைக் குறைத்துக்கொள்வதற்கு ஒரு எளிய வழியைத் தெரிந்துகொண்டு அதை நான்கு மாத காலமாக விடாது அப்பியசித்து வந்தாள். அதற்குப் பின்னர் இப்போது ஒன்பது ஸ்டோன் எடைக்கு குறைவாகவே அவளுடைய எடை இருந்து வருகிறது. எவ்வாறு அது நிகழ்ந்ததென்பதை பின் வருமாறு குறிப்பிடுகிருள்.

நான்கு மாதத்திற்கு முன் தான் வேடிக்கையாக குருஷன் சால்ட் சாப்பிட ஆரம்பித்தேன். அதற்கு முன்னடி ஏற்கெனவே இன்னொரு முறையை 12 மாதகாலமாக பின்பற்றி எடை குறையாமல் 4 பவுண்டு அதிகமாகவே, ஏமாற்ற மடைந்திருந்தேனுகையால், எதிலும் எனக்கு நம்பிக்கை யில்லாமலேயே யிருந்தது. ஒரு பாட்டில் குருஷன் சால்ட் சாப்பிட்ட பின்னர் தான் எனக்கு ஒரு மாறுதலான அபிப்பிராயம் ஏற்பட்டு மீண்டும் குருஷன் சால்ட்டையே சாப்பிட்டு வந்ததில் எல்லாவிதத்திலும் குணமாகவே ஏற்பட்டது. இன்று நான் அதன் பலனல் மிகுந்த சந்தோஷமடைகிறேன். என் உயரம் 5 அடி தான். ஆனல் குருஷன் சால்ட் சாப்பிடு முன் என் எடை 11 ஸ்டோன் 4 பவுண்டு. இப்போது என் எடை 9 ஸ்டோனுக்கு கம்மியாகவேயுள்ளது."



குருஷன் சால்ட்டிலுள்ள 6 உப்புகள் உள் கருவிகளிடையே வேலை செய்து, தினசரிக் கழிவுகளை சுத்தமாகப் போக்கி எவ்வித விஷமும் அக்கருவிகளை பீடியாமல் செய்கிறது. கொஞ்சம் கொஞ்சமாய் அசிங்கமான ஊழற்சதையும் மறைந்து பூர்ண குணம் ஏற்படுகிறது.

ஜூன் முதல் தேதியிலிருந்து ஜப்பானியர் ஒரு லக்ஷம் டன் இரும்புத் துண்டுகளை வாங்கியிருக்கின்றனர்.

## திருப்பரங்குன்றத்தில் விதவா-விவாகம்

நிகழும் விசு வருஷம் வைகாசி மாதம் 23 தேதி காலை மணி 7-30க்கு மேல் 8-30க்குள் திருப்பரங்குன்றம் ஸ்ரீ சுப்ரமண்ய சுவாமி சன்னிதானத்தில், பரம்பக்குடிக்கு மேற்கே 3 மைல தூரத்திலுள்ள ஆய்க்குடி சேகரம் தெளிச்சாத்த நல்லூர் மு. ம.

வேலுச்சாமி பிள்ளை—மீனம்பாள்.

வேலுச்சாமிப் பிள்ளைக்கும் வேம்பத்தூர் ச. வெள்ளச்சாமி பிள்ளை குமாரி மீனம்பாளுக்கும் மறுமணம்பலகிராமஉறவின்முறையார் முன்னிலையில் வெகு சிறப்பாக நடைபெற்றது. விஜயம் செய்திருந்தவர்களில் முக்கியஸ்தர்களில் சிலர் ஆய்க்குடி ஆ. ரெ. கேசவராமு பிள்ளை ஹெட்மேன், ஷையூர் ஆ. த. காயாம்பு பிள்ளை, ஷையூர் வேணுகோபால் பிள்ளை பேஷ்கார், ஷையூர் ச. கு. தங்கச்சாமி பிள்ளை ஷையூர் ராம. ஆ. பாலுச்சாமி பிள்ளை. திருச்சண்முக நாதபுரம் ச. பொ. பொன்னையா பிள்ளை, ஷையூர் மு. பொ. செல்லய்யா பிள்ளை, ஆ. வே. சாமிக்கண்ணு பிள்ளை, ரெ. மு. நீலமேகம் பிள்ளை, சிங்கம்புணரி மீ. ராம. சுப்பய்யா பிள்ளை, டி சேவுகப் பெருமாள் பிள்ளை, சொ. நடராஜ பிள்ளை பேஷ்கார். அம்பாத்துறை, பூமிபால கிருஷ்ணம் பிள்ளை, கர்ணம், ஷையூர் நல்லதம்பி பிள்ளை, ஷையூர் நடராஜ பிள்ளை, திருப்பரங்குன்றம் சுப. கருப்பபிள்ளை, சுப. க. அய்யா பிள்ளை, மானமதுரை சோ. காளிமுத்துப் பிள்ளை, பத்தல்குடி ராம. தங்கச்சாமி பிள்ளை கர்ணம்; தெளிச்சாத்த நல்லூர் மு. சின்னச்சாமி பிள்ளை சி. துரைராஜ பிள்ளை, சுப. வேலுபிள்ளை, குரு. ஜெயராமு பிள்ளை, ராம. கிருஷ்ணசாமி பிள்ளை, மதுரை சுப்பாணியா பிள்ளை, காளிமுத்துப் பிள்ளை, சுந்தரம் பிள்ளை, வேம்பத்தூர் மா. கரு. துலாராஜூ பிள்ளை; எழூர் கொந்தன வேளாளர் சங்கக் காரியதரிசியும் கல்லூரணி தேசபக்தருமான வ. தங்கச்சாமி பாரதி; இன்னும் பல ஆண் பெண்கள் 50 ஜனங்கள் முன்னிலையில் ஆசிர்வதிக்கப் பெற்று மங்களகரமாய் மணம் முடிக்கப் பெற்றது. மணமகன் தாரமிழந்தவர், வயது 33 மணமகள் கணவன் இழந்தவர் வயது 21.

### திருவிதாங்கூரில் பெண் போலீஸ்

பெண்கள் போலீஸ் வேலைக்கு தெரிந்தெடுப்பு சமீபத்தில் நடந்த போது சுமார் 300 பெண்கள் விஜயம் செய்ததாகவும், அவர்களில் பிராமண ஸ்திரீகளும், முகமதிய ஸ்திரீகளும் இருந்ததாயும் தெரிகிறது. 40 பேர் தெரிந்தெடுக்கப்பட்டிருக்கின்றனர்.

### காக்ஸார்களின் எண்ணிக்கை: மொத்தம் 30,000 பேர்

தற்போது காக்ஸார்கள் மொத்தம் 30,000க்கு மேற்பட்டவர்கள் இருப்பதாகக் கருதப்படுகிறது. இவர்களில் சுமார் 14,000 பேர் ஐக்கிய மாகாணத்திலும் 5000க்கு மேற்பட்டவர்கள் பஞ்சாபிலும் இருப்பதாகவும், மிச்சம் பேர் இதர மாகாணங்களிலும் இந்திய சமஸ்தானங்களிலும் சிறு சிறு கூட்டங்களாகச் சிதறி இருப்பதாகவும் தெரிகிறது. ஆனல் காக்ஸார்களோ தாங்கள் இன்னும் அதிகமாயிருப்பதாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள்.



## செட்டியார்கள் வர்த்தக சங்கம், பினங்கு

பினங்கு நாட்டுக்கோட்டைச் செட்டியார்களின் வர்த்தக சங்கத்தில் அகில மலாயா செட்டியார்களின் மத்திய ஹைஸ்கூல் கமிட்டி சம்பந்தமாக ஓர் சொற்பொழிவுக் கூட்டம் 13-5-41 செவ்வாய்க்கிழமை மாலை 5-மணிக்கு பினங்கு திரு. அரு. வீர. அருணசலம் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. தலைவர் முன்னுரையில் மத்திய ஹைஸ்கூல் வேண்டியதன் அவசியத்தையும் மலாயாவிலுள்ள செட்டியார்கள் அவசியம் பண உதவி செய்து கல்லூரியை அமைக்க வேண்டியதையும் விரிவாக எடுத்துச் சொன்னர்கள். ஹைஸ்கூல் கமிட்டி கன்வீனர் அபிசீனியா பழ. நாச்சியப்ப செட்டியார் ஹைஸ்கூல் சம்பந்தமாக விரிவாகப் பேசியதுடன் மலாய் நாட்டில் வசிக்கும் செட்டியார்கள் அனைவரும் தாராளமாகப் பணம் உதவும்படியும் தாய் நாட்டிலுள்ள முதலாளிமார்களும் கருணை காட்டி உதவி புரிவதில் முன்னிற்கும்படியும் கேட்டுக்கொண்டார்கள் கூட்டத்திற்குப் பினங்கு மற்ற அக்கரையிலுள்ள நகரத்தார்களும் விஜயம் செய்திருந்தார்கள்.

## இரங்கூன் நகர மக்களைக் காலி செய்யும் ஏற்பாடு

### வெளியேற்றும் ஸ்தலம் ஒன்னச்சாங்

பர்மாமீது சத்ரு ஒருக்கால் படையெடுத்து வந்தால் நகர மக்களைக் காலி செய்யும் திட்டம் ஒன்று அதிகாரிகளின் கவனத்திலிருந்து வந்தது வாசகர்கள் அறிந்ததேயாகும். இந்தியர்களையும் இதரர்களையும் வெளியேற்றிக்கொண்டு போய் வைக்க சர்க்கார் இது சமயம் ஒன்னச்சாங் என்ற இடத்தை தேர்ந்தெடுத்துள்ளனர். இங்கு இந்தியர்களையும் இதரர்களையும் அடைத்து வைக்க 20 ஏக்கர் நிலம் கிடைக்கக்கூடியதாயிருக்கிறது. சர்க்கார் இவ்விடத்தில் சுகாதார முறைகளையும், ஜல சப்ளைகளையும் ஏற்படுத்தி இந்த ஸ்தலத்திற்கு ஒரு ரோடு பாதை போடுவதாகவும் சம்மதித்துள்ளனர். இவ்விடத்தில் சமூக வாரியான ஸ்தலங்கள் சிருஷ்டிக்கப்படுமாம். மேலும் ஒன்னச்சாங்குக்கு இரயில் மார்க்கமாகவும், ரோடு மார்க்கமாகவும் சுலபமாகச் செல்லலாம். இந்திய எவாக்குவேஷன் கமிட்டியினர் செய்துகொண்ட பிரதிநிதித்துவத்தின் பேரில் எவாக்குவேஷன் ஆபீஸர் மிஸ்டர் W. மார்ஷ் என்பவரும், இந்திய ஏஜெண்டான மிஸ்டர் ஹட்சிங்ஸ், ராய்பகதூர் விர்ஜிதயா, ஜனாப் எஸ். ஏ. எஸ். தயாப்ஜி, மிஸ்டர் கே. என். டங்காலி முதலியோர் ஒன்னச்சாங்குக்குச் சென்று வெளியேற்றப்படும் திட்டங்களை சாங்கோபாங்கமாக விவாதித்ததின் பேரில், இந்த ஸ்தலத்தில் 20,000 பேர்கள் அடங்குவார்களென்று தெரியவந்தது. —('தனவணிகன்')

### இந்திய மந்திரி பதவி

#### வெட்ஜ்வுட் பென் வருவாரா?

மிஸ்டர் சர்ச்சில் மந்திரி சபையைத் திருத்தி யமைப்பார். அதில் மிஸ்டர் அமெரி இந்தியா மந்திரி பதவியிலிருந்து விலகுவார். தொழிற்கட்சிக்காரர் இந்தியா மந்திரி பதவிக்கு ஏற்கனவே இப்பதவியிலிருந்த மிஸ்டர் வெட்ஜ்வுட் பென்னை நியமிக்க வேண்டுமென வற்புறுத்துவார் என்பதாக "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" லண்டன் நிருபர் கூறுகிறார்.



## கொட்டகைகளை எடுத்துவிட வேண்டும்

### சென்னையில் ஏற்பாடு

சென்னை நகரில் அநேகம் வீடுகளின் மெத்தைகளில் கொட்டகைகளும் பந்தல்களும் போடப்பட்டிருக்கின்றன வென்றும் அவை தீப்பற்றக் கூடிய சாமான்களால் நிர்மாணிக்கப்பட்டிருக்கின்றன வென்றும் நகரத்தில் படையெடுப்பு ஏற்பட்டால் தீயணைக்கும் போது அவை வெகு தடையாக விருக்குமென்றும் எனவே கூடிய சீக்கிரம் அவற்றை எடுத்துவிட ஏற்பாடு செய்யவேண்டுமென்று விமானப்படையெடுப்பு முன்னச்சரிக்கை இலாகா விசேஷ அதிகாரி சர்க்காருக்கு அறிவித்திருக்கிறார்.

மேற்படி கொட்டகைகள் பந்தல்கள் கார்ப்பரேஷன் லைசென்ஸ் பெற்றே போடப்பட்டிருக்கின்ற வென்றும் கூடுமான வரையில் அவைகளை எடுக்க கார்ப்பரேஷன் நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறதென்றும் சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

—

அமெரிக்க அலுமினியம் கம்பெனி மீண்டும் சமரசம் ஏற்பட்டு வேலை துவங்கி விட்டது. இதன்பயனாக தொழிலாளர்களுக்கு சம்பள உயர்வுகிடைத்திருக்கிறது.

## மைசூர் ஜனப்பிரதிநிதி சபை

### திவான் பேசுகையில் பகிஷ்காரம்

மைசூர் பிரதிநிதி சபையின் ஜூன் வே. நடந்த கூட்டத்தில் காங்கிரஸ் கக்ஷி தலைவர் ஸ்ரீ கே. வி. ரெட்டி பிரேரிக்க விருந்த தீர்மானத்துக்கு அநுமதியளிக்கத் தலைவர் மறுத்துவிட்டார். மகாராஜாவின் பிரசங்கத்தில் ஜனநாயக உணர்ச்சி அடங்கியிருப்பதைப் பாராட்டுகின்ற போதிலும், தற்போதைய அரசியல் மிகவும் பிற்போக்குத் தன்மை வாய்ந்ததாகவும், ஜனநாயகத் தன்மையற்றதாகவும், இருப்பதற்காக வருந்துவதாகவும் ஆகவே அதை உடனே திருத்தி அமைக்க வேண்டுமென்று வற்புறுத்துவதாகவும் தீர்மானம் கூறியது.

திவான் தமது பிரசங்கத்தை நிகழ்த்துகையில் காங்கிரஸ் கக்ஷியினர் சபைக்கு வெளியிலேயே இருந்து அப்பால் தான் உள்ளே பிரவேசித்தனர்.

### திவான் பிரசங்கம்

மைசூர் திவான் ஸ்ரீ என். மாதவராவ் சபைக் கூட்டத்தில் பேசுகையில் மகாராஜாவின் மந்திரிகள் என்றமுறையில் தாங்கள் கக்ஷிகளிலிருந்தும், கக்ஷி அரசியலிலிருந்தும், ஒதுங்கிநிற்க வேண்டுமென்றும், சமஸ்தானநலனையேபிரதானமாகக்கருதவேண்டுமென்பதே சபையினரின் ஆவல் என்பது தமக்குத் தெரியுமென்றும், சமஸ்தான மக்களின் சுபிக்ஷத்தைப் பெருக்குவதே நிர்வாகத்தின் முக்கிய நோக்கமென்றும் புதிய அரசியலைத் தாராள நோக்குடன் அமுல் நடத்த வேண்டுமென்பதே தங்கள் ஆவல் என்றும், வளர்ச்சிக்கு அதில் இடமிருக்கிற தென்றும் கூறினர்.

## விமான எதிர்ப்புச் செலவு யார் ஏற்பது?

### சர்க்கார்—கார்ப்பரேஷன் தகராறு

விமானத்தை தாக்குதல் எதிர்ப்புக்கான செலவுகள் முனிஸிபல் பணத்திலிருந்து செய்ய வேண்டுமென வங்காள சர்க்கார் அபிப்பிராயத்தை கல்கத்தா முனிஸிபல் கார்ப்பரேஷன் ஒப்புக் கொள்ளவில்லை. இவ்விதமான எதிர்ப்பு ஸ்தலஸ்தாபனங்களின் சாதாரண வேலையில் வராது. யுத்தவேலையைச் சார்ந்தது. பிரிட்டனில் இம்மாதிரிதான் கருதப்படுகிறது. ஆதலால் செலவை சர்க்காரே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கார்ப்பரேஷன் கூறுகிறது.





## சிங்கப்பூர் கழகத்தில் போலீஸ் பரிசோதனை

### 20,000 ராஜத்துவேஷ பிரசுரங்கள் கைப்பற்றப்பட்டன.

சிங்கப்பூர், மே. 28—

பாலிஸ்டர் ரோட்டிலுள்ள சிங்கப்பூர் கடல்கடந்த சீன இளைஞர்கள் தேசிய ரக்ஷணிய சங்கம் ஒரு பொதுவுடமை ஸ்தாபன மென்றும், சட்டவிரோதமான இளைஞர் கழகமென்றும் அந்த சங்கத்தின் தலைமைக் காரியாலயத்திற்குள் போலீசார் சென்று பரிசோதித்ததில் 20000 இராஜத்துவேஷமான தஸ்தாவேஜுகள் கைப்பற்றப்பட்டன வென்றும், போலீஸ் உதவி சூப்பரின்டெண்டண்ட் ஸ்ரீ ஜி. ஈ. டிவான் ஷயர் நேற்று கிரிமினல் ஜில்லா கோர்ட்டில் கூறினர். ஷை ஸ்தாபனத்தை நடத்தியதாகவும் ஷை ஸ்தாபனத்தில் அங்கத்தினராயிருந்ததாகவும் 2 சீன இளைஞர்கள் குற்றத்தை ஒப்புக்கொண்டனர்.

## மாணவர் உபகாரச் சம்பளம்

பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்கச் சார்பில் இவ்வருஷம் முதல் ஆண்டு தோறும் செட்டியார் மாணவர்களுக்குக் கொடுக்கப் பெறும் உபகாரச் சம்பளத்தை இவ்வாண்டில் கீழ்க்கண்ட மாணவர்களுக்குக் கொடுப்பதென அதற்கென நியமிக்கப் பெற்ற உபகாரச் சம்பளக் கமிட்டியார் தீர்மானஞ் செய்துள்ளனர்:—

1. திரு. M. அண்ணாமலை செட்டியார், மேலைச்சிவபுரி, புதுக்கோட்டை ஸ்டேட்.
2. திரு. V. R. கிருஷ்ணன், கம்பை கல்விக்கழகம், கம்பை.
3. திரு. RM. RM. கருப்பையா, பாகனேரி, ராமநாதபுரம் ஜில்லா.
4. திரு. N. N. சுப்பையா, ஸ்ட்ராண்டு ரோடு, இரங்கோன்.

## உயர்ந்த சக்தி விமான எஞ்சின்கள்: அமெரிக்க உற்பத்தி ஏறுகிறது

உயர்ந்த சக்தியுள்ள விமான எஞ்சின்கள் மே மாதத்தில் உற்பத்தி செய்யப்பட்டுள்ள அளவுக்கு அதற்கு முன் எப்போதுமே உற்பத்தி செய்யப்பட்டதில்லை என்னும் விஷயத்தை வால் ஸ்ட்ரிட் ஜர்னல் வெளியிட்டிருக்கிறது. ரைட் ப்ராட்டவிட்னி, ஆல்லிஸன் என்னும் மூன்று முக்கியமான கம்பெனிகளும் சேர்ந்து வேலை செய்து இம்மாதத்தில் சுமார் 3500 எஞ்சின்களை உற்பத்தி செய்திருக்கின்றன. சென்ற ஜனவரி மாதத்தில் 2400 தான் உற்பத்தியாயிருக்கின்றன. 1939 செப்டம்பரில் உற்பத்தியானவையோ 300 தான்.

## ஸ்ரீமதி கமலாதேவி

ஸ்ரீமதி கமலாதேவி யோகொ ஹோமா (ஜப்பான்) போய்ச் சேர்ந்திருக்கிறார். மே 23உ அவர் அங்கரை அடைந்த போது, சுமார் 100 இந்தியர்கட்கு மேல் அவரை வரவேற்று உபசரித்தனர். அவர் அங்கிருந்து டோக்கியோ சென்றார்.





## அகில மலாயா செட்டியார்கள் மத்திய ஹைஸ்கூல் கமிட்டி

அகில மலாயா செட்டியார்கள் மத்திய ஹைஸ்கூல் கமிட்டியின் சார்பில் டெலுக்கான்சன் அன்சன் ரோடு 57, நம்பர் வீட்டில் ஓர் சொற்பொழிவுக் கூட்டம் 11—5—41 காலை 10 மணிக்கு நடைபெற்றது. கூட்டத்திற்கு டெலுக்கான்சன் திரு. சித. சோம. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமை வகித்தார்கள். தலைவர் முன்னுரையில் மத்திய ஹைஸ்கூல் வேண்டிய அவசியத்தையும் அதற்கு மலாயாவிலுள்ள செட்டியார்கள் தாராளமாகப் பண உதவி செய்யவேணுமென்றும் குறிப்பிட்டார்கள். ஈப்போ கிளைச்சங்கக் காரியதரிசி திரு. பெ. சு. நடராசன் செட்டியார் ஹைஸ்கூல் வேண்டியதன் அவசியத்தை எடுத்துப் பேசினார்கள். பின்னர் கமிட்டிக் கன்வீனர் அபீசினியா நாச்சியப்ப செட்டியார் கமிட்டியின் நோக்கங்களையும் கல்லூரி நிறுவவேண்டிய அவசியத்தையும் விரிவாக எடுத்துச் சொல்லி செட்டியார்கள் பண உதவி செய்யவேண்டிய அவசியத்தையும் அன்பர்கள் இப்பொழுதே முதலாளிகளுக்கு எழுதித் திருப்திகரமான அனுமதியை வாங்கிக் கொள்ளும்படியும் சொல்லி சீக்கிரம் கல்லூரியை அமைக்க அன்பர்கள் உதவி செய்யும்படி கேட்டுக் கொண்டார்.

## தசரதர் மந்திராலோசனை

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இவரா இத்தனை ஆயிரம் ஆண்டுகள் அரசுபுரிந்த சக்ரவர்த்தி என்ற ஒரு ஐயம் எழுகிறது. அன்றியும் வசிஷ்ட முனிவர் இங்கே மகுடாபிஷேகத்துக்கு [illegible] உரியவற்றைக் கவனித்து வருகிறாரே யொழிய, ஆலோசனை சபையில் எதுவும் இடம்பெற்று ஆலோசனைகூறியதாகத் தெரியவில்லை. சுமந்திரனும் வெறுந் தேர்ப்பாகன்தான்; வேறு உயர்ந்த நிலை எதும் அவனுக்கு வான்மீகி அளிக்கவில்லை. இராமனைக் குறித்தும் விசேஷமாகக் கூறுவதற்கு ஒன்றுமில்லை. தசரதர், வசிஷ்டர், சுமந்திரன், இராமன் என்னும் நான்கு கதா பாத்திரங்களை நாம் இந்தக் கட்டத்தில் சந்திக்கிறோம். கதையிலே வேறிடங்களில் இவர்கள் வருவதை நோக்கி, இவர்களுக்குத் தனித்த மனிதப் பண்புகள்—சிறப்பியல்புகள் உண்டா என்று பார்த்து அவை இன்னவை என்று வரையறுக்கவும், அவ் வியல்புகளையும் பண்புகளையும் இச் சிறு கட்டத்திலும் பிற இடங்களிலும் இப் பாத்திரங்களுக்குப் பொருத்திப் பார்க்கவும் வான்மீகி ராமாயணத்தில் இடமே இல்லை.

கம்பர் காவியத்தைச் சிறிது ஆராய்வோம். இந்த நான்கு பாத்திரங்களின் சிறப்பியல்புகளும் உள்ளப் பண்புகளும் [illegible] வேறு சந்தர்ப்பங்களில் தேடவேண்டிய அவசியமே இல்லை. இச் சிறு கட்டத்திலே அவை முழுமையும் காணலாம். தசரதர் அறுபதினாயிரம் ஆண்டுகள் அரசாண்டார் என்பது கதை. மந்திராலோசனை மண்டபத்தே இருந்து அவர் சாமர்த்தியமாக மந்திரிகளுடன் பேசித் தம் கருத்தை முற்றுவிக்கும் செயலை நாம் கவனிக்கும்போது, இவருடைய சாதுர்யத்துக்கு அறுபதினாயிரம் ஆண்டுகள் என்ற ஒரு கால வரையறை வேண்டிய அவசியமே இல்லை யென்று தோன்றுகிறது. மக்களெல்லோரையும் தம் வசப்படுத்தி எத்தனையோ யுகங்கள் அரசுபுரிவதற்கு வேண்டிய திறமை இவரிடம் இருப்பதைக் காணலாம். மற்றும், இராமனது பிரிவாற்றாமல் பின்னால் தசரதர் உயிர் துறக்கிறார். அவ்வளவு ஆழ்ந்த அன்பு இராமனிடம் அவருக் கிருந்ததற்கு அடையாளமான செய்கைகளை ஆங்காங்கு இக் கட்டத்திலும் நாம் பார்க்கிறோம். இராமனைக் கடைசியாக இவர் பார்க்கும் அன்புப பார்வை ஒன்றே போதும். குடிகளிடத்து அன்புடையவர் என்பதை, இராமனைத் தழுவியபோது, வையம்புரக்க வல்ல தோள்களா இவை என இராமனுடைய தோளை இவர் அளந்ததாகக் கம்பர் குறிப்பிடுவதிலிருந்து அறியலாகும். இவற்றையெல்லாம், தசரத சக்ரவர்த்தி என்ற அளவிலே எவ்வளவோ உன்னதமான ஒரு மனித தத்துவம் நம் மனத்திலே தோன்றுகிறது.

இவ்வளவு சிறந்த தன்மைகளைப் பெற்ற தசரதருக்குக் குருவானவர் வசிஷ்டர். நான் மறைத் திசைமுகன் திருமகன் என்றார் கம்பர். தசரதர் கருத்தைக் கேட்டு இவர் மகிழ்ந்து, "உன்னுடைய கருமமும் தருமமும் இவை" எனப் பாராட்டி யுரைக்கிறார். மேலும் இராமனை,

"அறத்தின் மூர்த்திவந் தவதரித்
தான்என்ப தல்லால்
பிறத்தி யாவையும் காத்தவை
பின்னுறத் துடைக்கும்
திறத்து மூவரும் திருத்திய
திருத்தும்அத் திறலோன்."

என்று அவர் போற்றிக் கூறுகையில், அவர் சொல்லும் கருத்தை நாம் ஒப்புக்கொள்கிறோம். கம்பர் வசிஷ்டரைக் குறிப்பிடும்போது கூறினாரல்லவா? "தேவர்கள் மூவரும் நால்வாய் முனி" என்று—அந்த வார்த்தைகளை ஆமோதிக்கிறோம். அமைச்சர் முதலியோர் வசிஷ்டரை முதலில் வணங்கிப் பின் தசரதரை [illegible] வணங்குவதிலிருந்து இவருடைய தகுதி இன்னும் தெளிவாகப் புலப்படுகிறது.

பிறகு சுமந்திரன். இவன் தேர்ப்பாகன் மட்டுமல்ல, தசரதருக்கு உயிர்த் துணைவன்; அவர் மனம் அனையான் இவனுடைய கூர்த்த அறிவை, மந்திரக் கிழவர் தம் முகத்தால் எழுதி நீட்டிய இங்கிதத்தை அறிந்து அதை அரசருக்கேற்பச் சொல்லும் திறத்தினால் உணர்கிறோம். "தொழுத கையினன், சுமந்திரன், முன் நின்று சொல்லும்" என்ற வார்த்தைகளில் கம்பர் இவனை நம் கண் முன் கொண்டுவந்து நிறுத்திவிட்டார். இவனுடைய உலக அறிவு, இராமபக்தி முதலிய குணங்களைப் பல வகையாலும் இங்கே நாம் கண்டோம்.

கடைசியாக இராமன். இங்கே ராமன் [illegible] சிறு பிள்ளை தான். விசேஷமாக ஒன்றும் இவனிடம் எதிர்பார்க்க வேண்டியிராத போதிலும், சில குறிப்புகளைப் பார்க்கிறோம். தந்தை அழைத்தமை கேட்டு விரைந்து வந்து வசிஷ்டரையும் தந்தையையும் முறையாகப் பணிகிறான். மகுடாபிஷேகத்தைப் பிரஸ்தாபித்த போது, இராமன் அதைக் காதலுற்றிலன், இகழ்ந்திலன், தசரதர் கட்டளையை ஏற்பது கடனெனக் கொண்டான். இராமன் புகழை வசிஷ்டர் வாயிலாகவும் சுமந்திரன் வாயிலாகவும் கேட்கிறோம். பின்னாலே இராமனுடைய அரிய செயல்களையும் உயர்ந்த தன்மையையும் காணும்போது இவ்விடத்தும் அவை ஒரு சிறிது தோன்றுமாறு கம்பர் அமைத்திருக்கும் திறத்தை எண்ணி அதிசயிக்கிறோம்.

இவ்வாறு இந்தச் சிறு கட்டத்தை ஊன்றிப் பார்க்கும்போது, இராமாயண கதா பாத்திரங்களில் சில பாத்திரங்களின் உள்ளப் பண்பை விளக்கவே இது அமைக்கப்பட்டிருப்பது போல நமக்குத் தோன்றுகிறது. [illegible] (முற்றிற்று.)

### நாட்டரசன் கோட்டை

பாரதி இலவச வாசகசாலைப் புத்தகாலய சங்கத்தின் நிர்வாகக் கூட்டம் 9-6-41 மாலை 6 மணிக்கு நடைபெற்றது. அவ்வமயம் உபகாரியதரிசி ஸ்ரீ குப. மு. இராமநாதன் செட்டியார் அயல்நாடு செல்வதை முன்னிட்டு தம் பதவியை ராஜிநாமாச் செய்திருந்ததை ஏற்றுக்கொண்டு அப்பதவிக்கு ஸ்ரீ கண. உல. மா. நடராசன் செட்டியாரை ஏகமனதாகத் தேர்தெடுக்கப் பெற்றது.





Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi (S. INDIA)

